

மெருகுவண்டிதி அலமேலு மங்க
8 8 8
அரிமுரி நவவினி அலமேலு மங்க ||
8

பலுசனி எலுகுன பாடி நீ மீதி பாட
8 8 8
மெலுபுகூரிமி அலமேலு மங்க
8
செலுலதொ நீ ஸாததி செப்பி செப்பி கரகீனி
8 8
அலபுக ஸொலபுக அலமேலு மங்க
8

ஈடுகா நீ ராககு எதுரெதுரு சூசீனி
8 8 8
மேடமீதிநுன்டி அலமேலு மங்க
8 8 8 8
வாடுமோமுதோ நீபை வலபு சல்லி சல்லி
8
ஆடநாட்புமு லாரெ அலமேலு மங்க |
8 8

மேருகொனி பிலிசீனி பரியமுலு செப்பி செப்பி

மேரமீர நின்னு அலுமேலு மங்க
8
ஈர்திஸ்ரீ வேங்கடேல நின்னு கூடெநேடு
8 2
ஆரிதேரெனனனிடானு அலமேலு மங்க |
8

(மின்னலிடை கொண்டு, புன்முறுவல் பூத்து வருகிருள் அலர்மேல் மங்கை

மெல்லிய குரலில், தேன் மொழியில் உன்னைப புகழ்ந்து பாடுகிருள். தன் தோழியரிடம் உன்னைப் புகழந்து பலவாறு கூறி அயர்ச்சியுடன் விளங்குகிருள் அலர்மேல் மங்கை.

உபபிரிகை மீது நினறு உன் வருகைக்காக எதிர்நோக்கி இருக்கிருள். பின்னர் உடல வாட, உன் மேல் தீராக் காதல்கொண்டு நடனம் புரிகின்ருள்.

உன் பெயரை பெருமிபபுடன் கூறிக்கொண்டு, காதல் நோய் சுட்டெரிக்க வேங்கடவனுன உனனுடன் கூட நாள எண்ணிக் கொண்டிருக்கின்ருள் அங் அலர்மேல் மங்கை )

(அன்னமாச்சார்யா கீர்த்தனை)

(இபபாடலுக்கான பண் 48-ம் பக்கத்தில் கொடுக்கபபட்டுள்ளது)





நவம்பர், 1984

# ஸப்தகிரி

இதழ் 6 மலர் 15

தனிப்பிரதி ரூ. 1 வருடச் சந்தா ரூ. 12

உள்ளுறை



அட்டைப்பட விளக்கம்

முகப்பில் : மறைந்த பாரதப் பிரதமர் திருமதி இந்திரா காந்தி அம்மையார்

பின்னட்டையில் : திருச்சானூர் பஞ்சமி தீர்த்தம்

இரண்டாவது, மூன்றாவது : 1972 முதல் 1982 வரை பல்வேறு கால நிலைகளில், கோயில் அதிகாரிகளின் பல்வேறு பதவிக் காலங்களில் இந்திராகாந்தி அவர்கள் திருமலைக்கு வந்தபோது எடுக்கப்பட்ட படங்கள்

அச்சிடுபவர்

திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி. தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

சிறப்பாசிரியர்

திரு. ஜி. குமாரசுவாமி ரெட்டி IAS,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

பிரதிகளுக்கு:

THE WELFARE OFFICER
Publication Section, T.T.D.
K. T. Road,
TIRUPATI

ஆசிரியர்

திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர்

திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.

# உங்களுடன்....

'பெண் என்றால் பேயும் இரங்கும்' எனும் முதுமொழி தந்திட்டு, பெண்மைக்கு-அதன் மெல்லியல்புக்குப் பெருமை தந்திட்ட அபபாரத பூமியே, மிருக இனமே திகைத்திடும் வகையில், அபபெண்மைக்கு, வரலாறு மன்னிக்காத ஒரு தகாத பழிக்கு வழி வகுத்து இன்று உலகத்தின் நகைப்புக்கு உள்ளாகியிருக்கிறது. மனிதனின் மிருக வெறி உச்சத்திற்கு உதாரணமாக அமைந்துவிட்டது, அண்மையில் நடந்து முடிந்த நமது பாரதப் பிரதமரின் முடிவு.

பெண்மை நம் நாடடில் எபபடிப் போற்றப்பட்டு வருகிறது என்பதற்கும், அப்பெண்மை இப்பாரதத்தின் பல்வேறு துறைகளில் ஆற்றிவந்த சிறபபின் சீர்மைக்கும் கடந்து சென்ற இந்திய சரித்திரமும், நம்மிடையே திகழும் நமது சமய இலக்கியங்களும் நமக்குச் சான்று'பகரும். பெண்மை ஆடசி செய்த - செய்யும் நிகழ்ச்சிகளை உலக சரித்திரம் நமக்குக் கூறும். ஆனால் அப்பெண்மையினைப் போற்றுவதிலும், ஆராதிப்பதிலும் ஈடு இணை நம் பாரதத்திற்கு வேறு நாடு இல்லை பல்வேறு வாழ்க்கை நிலைகளில் பங்கேற்று இந்திய ஆணின் ஒவ்வொரு உயர்வு நிலைக்கும் உற்ற துணையாக இருந்து, கொண்டவனுக்கும், குடும்பத்திற்கும் அவள் ஆற்றும் பணி மகத்தானது! மானசிகமாக அனுபவிக்கத்தக்கது. அத்தகு பெண்மையே ஒரு நாட்டின் தலைவியாக விளங்கும் போது, அந்த நாட்டின் பெருமையும் அருமையும் சொல்லிமாளாது

இவ்வகையில் திருமதி இந்திரா காந்தி அம்மையார் அவர்கள் இப்பாரதத்தின் பிரதமராக சுமார் 17 ஆண்டுகள் இருந்துள்ளார்கள். ஏதோ ஒரு காடடில் பூத்த புது மலர் அல்ல அவர். நன்கு பராமரிக்கப்பட்ட நந்தவனத்தில் பூத்த வாசனை மலர் அவர். ஆம், கல்வி, விவேகம், தியாகம், நாட்டுப்பற்று, சமயப்பற்று போன்ற பாரத மண்ணிற்கே உரிய பண்புகளின் உறைவிடமாகத் திகழ்ந்த ஓர் உயர் குடும்பத்தில் பிறந்த அவர், அரசியலில் ஆழங்கண்டு, பெண்மைக்கு ஒரு சவாலாக, நாட்டின் பிரச்சனைகளை எதிர்கொண்டு பாரதப் பிரதமராக விளங்கினார். தனது தந்தையார் காலம் முதல் தன்னுடைய இறுதி நாளின் சில நாடகள் முன் வரை இமயம் முதல் குமரி வரை பல்வேறு யாத்திரை தலங்களுக்கு அவர் வருகை புரிந்த நிகழ்ச்சிகள், அவருடைய சமயப்பற்றுக்குச் சான்றாக விளங்குகின்றன. அதுவும் அவருடைய திருமலை வருகைகள் குறிபபிடத்தகுந்த ஒன்றாக விளங்குகின்றன நாடு பிரச்சனைகள் எதிர் நோக்கியபோது, அவர் எடுத்துக் கொண்ட செயற்திட்டங்கள் யாவும் "பெண் புத்தி பின் புத்தி'' என்ற ஒரு முதுமொழியினை மக்கள் மறக்க காரணமாயின ஊரிலும் உலகத்திலும் அமைதியும், சுபிட்சமும் நடமாட வேண்டியதன் அவசியத்தைப புரிந்து கொண்டு, குழந்தையிடம் தாய் காட்டும் பரிவும் கண்டிப்பும் போல, தன் உறுதியாலும், பண்பாலும் நாட்டின் பிரச்சனைகளை எதிர்கொண்ட அவருடைய செயற்திறனுக்கு அத்தாட்சியாக உலக அரங்கில் அவர் வகித்த இடமும், உலகத் தலைவர்களின் பாராட்டும், அவர் முடிவினைக் கேட்ட சமயத் தலைவர்களின் இரங்கல் மொழிகளும், இந்தியமக்களின் நெஞ்சப புலம்பல்களும் விளங்குகின்றன

இத்தகு பெருமைமிகு திருமதி இந்திரா காந்தி அவர்கள் பெற்ற முடிவு, இது வரை, புகழ் பெற்ற சில உலகத் தலைவர்களின் முடிவுகளை மறக்கச் செய்து விடடது அவர்மீது சரமாரியாகக் குண்டுகளைப பொழிந்ததைப பார்க்கும்போது, மிருக வெறிக்கு மனிதன் எவ்வளவு எளிதில் பலியாகிறான் என்பது புலனாகிறது. ஓர் உயிரினை வலுக்கட்டாயமாகப போக்கி விடடால், அதனுடன் ஒரு பிரச்சனையும் முடிந்துவிடும் என்றால், நாட்டில் பிரச்சனைகள் தீர, ஒவ்வொருவரின் கையிலும் ஒரு கொலை ஆயுதம் இருந்தால் போதுமே! இந்த முடிவுக்கு ஒருவன் வந்து விட்டால், அதன் பின்பு அவன் தன்னை மனிதன் என்று கூறிக் கொள்வதில் பொருள் இல்லை; தன் நாடடையும், தன் சமயத்தையும் பற்றிய பெருமை பேசுவதில் பயனில்லை பிரச்சனைகளை சீரிய நோக்கத்துடன் சிந்தித்து, பேசித் தீர்த்துக் கொள்வதன் மூலம் நாம் நம்மை உயர்த்திக் கொள்ள ஒரு வாய்ப்புண்டு என்பதை நாம் உணர்ந்தால், அதுவே, இந்திய மேன்மைக்காக தன் இறுதி மூச்சு நின்றிடும் நிலையிலும் தன் குருதியை இப்பாரத மண்ணில் உதிரச் செய்த நமது இந்திரா அம்மையாருக்கு நாம் செலுத்திடும் நன்றிக் கடனாக அமையும்.



## மௌன அஞ்சலி

அண்மையில் மறைநத நம் பாரதப பிரதமர் திருமதி இநதிராகாநதிக்கு, தி தி தேவஸதான மேலாண்மையும, அதன ஊழியாகளும் 5-11-84 அன்று தங்களுடைய மௌன அஞ்சலியைத் தெரிவித்தனர். அன்று காலை நடைபெறற இரங்கற் கூட்டத்தின்போது, தி தி. தே செயலாடசித் தலைவர், மேலாண்மையின சார்பில், தறபோதைய இந்தியப பிரதமர் திரு ராஜீவ காநதி அவர்களுக்கு 'இரங்கற செயதியினை' அனுபபினா. அனறு மாலை தி தி. தே ஊழியாகள கலந்து கொண்ட "மௌன ஊர்வலம்" ஒனறு நடைபெறறது



ஸபதகிரியில அவவபபோது பல சமய கடடுரைகளை எழுதி வரும் காஞ்சிபுரம திரு. மா சீதாராமன அவாகள 1983-84ம் ஆண்டுககான தமிழ்நாடு 'சிறந்த நலலாசிரியா' விருதினை, அண்மையில தமிழநாடு கல்வி அமைசசர் திரு சி அரஙக நாயகம் அவாகளிடமிருநது பெறுகிறார்.

## பதிவு நாடாககளில் வேதஙகள

திருபபதியில தி தி தே பதிவு நிலையத்தில புதிதாக 'ஒனபது வழி கலவை இயநதிரம்' ஒனறு தி தி தே செயலாடசிததலைவா திரு. ஜி குமாரசுவாமி ரெடடி அவர்களால முடுக்கி விடபபடடது. எளிதில, விரைவாக வேதங்களை பதிவு நாடாக்களில பதிவு செயவதறகெனறு இவ இயந்திரம அமைககபபடடுளளது. இதுவரை 1200 நாடாககளில 600 மணி நேரஙகள இடைவெளியில் கேடகபபடும வகையில வேதங்கள் பதிவு செயயபபடடுளளன. விரைவில் இபபதிவு நாடாக்கள பொதுமககள விறபனைககுக கொணடுவர, மேலாணமை முயற்சி செயது வருகினறது



## தி. தி. தே. மேலாண்மைக் குழுவின் முக்கிய முடிவுகள்

திருமலையில் கடடபபடடு வரும் 'கயூ காம்பளக்ஸ' எனும் தரிசனத்திறகாக காத்திருககும யாததிரிகர்கள உடகாருவதறகாகக் கடடப்படடு வரும கடடிடத தொகுதியில், அவாகள சௌகாயமாக உடகாருவதறகெனறு எளிமையான உறுதியான 'ஃபைபா கிளாஸ' எனும் பொருளால தயாரிக்கபபடட இருககைகளை அமைக்க குழு ரூ 14,61,000/- ஒதுக்கியுள்ளது

திருபபதியில உளள தி தி தே பால மநதிா எனறழைககபபடுமஅநாதைச் சிறுர்கள தஙகும் பளளியில், சிறுவர்களை அனுமதிபபதறகு கீழக்கண்ட சில மாறறஙகளை மேலாணமை மேறகொண்டுளளது அனுமதி எண்ணிக்கை 200 ஆக தடுககபபடடுளளது அனுமதியினபோது சிறுர்களின வயது 5 முதல் 7 ஆக இருத்தல் வேணடும அவாகள இநது சமயத்தவராக இருததல வேணடும தாய தநதை இலலாது, அலலது தநதை இறநது தாயால காபபாறற முடியாத சூழநிலையில இருககும சிறுாகள அனுமதிககபபடுவர் இபபளளியில் இருககுமபோது மாணவாகளுக்கு தையறகலை, நூல நூறபு, தாளியங்கியல், அசசுஇயல ஆகிய துறைகளில பயிறசி அளிககபபடும. 18 வயது நிரமபியவர்கள, பளளித் தேர்வில தவறியவர்கள, தோவு எழுதாதவாகள பளளியை விடடு வெளியேறறபபடுவர்

குண்டூா மாவடடம் புலகமபாடு தாலூக்காவில சீதாசாகரம எனும் இடததில உளள வேத பாடசாலையில இருககும ஆசிரியர்களுககு (குரு) தலா ரூ 500/ம, மாணவர்களுககு தலா ரூ 200/-ம வருடாந்திர சிறபபு ஊதியமாக அளிகக குழு முடிவு செயதுளளது

தி தி தே பஞசாஙக காததாவாக அமாததபபடடிருக்கும் ஸ்ரீ தங்கிரால சினன அனுமத் சித்தாநதி அவாகளின வருடாநதிர சிறபபூதியம ரூ 2116/-லிருநது ரூ 3000/-ஆக உயர்த்துவதெனறு குழு முடிவு செயதுள்ளது

ஃ ஃ ஃ

# திருவேங்கடமலை வரலாற்று மாலை

நாவல்பாக்கம் ஸ்ரீ தேவநாதாச்சாரியர், திருப்பதி

## ஆறும ஸதபகம

### திருமலை நம்பிகளின் வரலாறு

இனி ஸ்ரீசைல பூர்ணர் (திருமலை நமபிகள) எனனும ஆசாரியரின சரித்திரம் கூறப்படும முனபு பூஜயரான யாமுன முனிவர் (ஆளவந்தார்) ஸகல சாஸதிரங்களாகிய கடலைக் கரை கண்டவராய ஸ்ரீரங்க திவய க்ஷேததிரத்தில எழுநதருளியிருந்து, ஸகல வேதாந்த ரகஸயங்களையும் கற்றுத் தேர்நத தம் சிஷயர்களாகிய பல ஸ்ரீ வைஷணவாகளுடன கூடி ஸகல சாஸ்திரப பொருளகளையும பிரவசனம் (போதனை) செயவதன் மூலமாகப பரமவைதிக ஸித்தாந்தம் (வேதத்தை அத்தாட்சியாக இசையுமவர்களில் மிகவுயர்ந்தவர்களது மதம்) என்று அழைக்கபபடும் ஸ்ரீவைஷணவ மதத்தை மேன மேலும் தழைக்கச செயது கொண்டு, ஸ்ரீரங்கநாதனை மஙகளா சாஸனம் செயவதில் முக்கிய நோககமுடையவராய அபபெருமானுடைய குணங்களை அனுபவிபபதிலும அவருக்குத் தொண்டு செயவதிலும் பற்றுடையவராக இருநதார்

அபபோது ஒருகால அவவாளவந்தாா திருவாயமொழி யெனறு புகழ் பெறறு நமமாழவார் அருளிய தமிழ வேதப பாசுரத தொகுதியில மூனறும் பத்தில (ஒழிவில காலமெல்லாம எனறு தொடஙகும) மூனறும பதிகத்தை ஓதி அதன பொருளைச சிந்தித்து மனம ஈடுபடப பெற்றவராய 'பரபநந ஜந கூடஸதரான (வீடு பெறுவதறகாகக கரும ஞான பகதிகளாகிய உபாயங்களில் இழியாமல திருமாலையே உபாயமாகக் கருதித் தஞ்சமடையும் ஸ்ரீ வைஷணவ மக்களின மூல புருஷரான) பராங்குசராகிய நம்மாழ்வார் பாரதந்த்ர்யம் (எல்லா வகையாலும் திருமாலுக்கே வசபபடடிருத்தல்) எனனும் தமது உண்மைத் தனமைக்கு ஏறறதான பூரணமான பரபத்தியை (=திருமகளை முன்னிட்டுத் திருமாலிடம வீடு பேற்றுக்குத் தக்க உபாயம தமக்கு ஏதுமில்லாமையையும் தமககு அபபிரானைத் தவிர வேறு கதியில்லாமையையும் தாம் அபபெருமானுக்கே அடிமையெனபதையும் விண்ணப்பித்து இவற்றால் பூர்த்தியடைந்த ப்ரபத்தியை – அவனையே தஞசமாகப் பற்றுதலை) திருவேங்கடமுடையானிடத்திலல்லவா அனுஷடித்தார் மிகவுயர்ந்த புருஷாாததமான (உயிாகள விரும்பும பயனான) கைங்கரியத்தையும இபபெருமானுக்கேயனறோ செயயப பாரித்தாா நாம எலலோரும அடையத தக்க மிகமிக உயாநத இடமாகிய பரமபதத்தில் வசிககும நிதய ஸூரிகளும இபபெருமானிடத்திலலலவா பூஜைக்கு வேண்டிய சிறந்த புஷபம் தீாத்தம தீபம தூபம முதலானவற்றை அன்புடன ஏநதிக் கொண்டு வநது ஸமர்பபித்து 'நாம செயய வேண்டியதைச் செயதுவிடடோ' மென்று திருபதியடைகிறார்கள இபபடிபபடட இததிவய தேசத்தில் பெருமாள திருமஞ்சனத்திறகான திவய தீர்ததம் உயர்ந்த மலர்கள் முதலானவற்றைக் கொண்டு வந்து கொடுத்துக் கொண்டிருந்து திருவேங்கடமுடையானை மகிழ்விக்க விரும்புகிறேன் பாக்கிய மறற எனக்கு இபபடிபபடட கைங்கர்யம் எங்ஙனம் கிடைக்கப் போகிறது' என்று கூறியவளவில, ஸத்துவகுணம் இதறகு மேல் யாரிடமுமிலலை என்னும்படி நிறையப பெற்றவரும அந்த ஆளவந்தாருடைய சிஷயர்களில் ஒருவருமாகிய இத்திருமலை நமபிகள் தமது ஆசாரியருடைய விருபபத்தைத் தாமே நிறைவேற்றுவதற்காக, அவர் தமக்குபபிரதி நிதியாக (பதிலாக) அவர் விரும்பிய கைங்கர்யத்தைச் செயய ஊக்கங்கொண்டு அவரிடம் அனுமதியையும் பெற்றுத் திருவேஙகடமலைக்கு வந்து வசித்துக கொண்டு பெருமாள திருமஞசனத்திறகுத் தூயதும் சுவையுளளதும் ஆரோக்கியமளிபபதுமாகிய பாபவிநாசனமெனனும் புண்ணியதீர்த்தத்தின நனனீரை, பக்தியுடன திருமங்கையாழவாா அருளிய தமிழ் மறைப பாடடுத் தொகுதியாகிய பெரிய திருமொழியை ஓதிக்கொணடே கொண்டு வந்து ஸமர்பபித்தும் புஷபாதிகளையும் இயன்றவரையில் கொண்டு வந்து கொடுத்தும் திருவேங்கடவனை மகிழவித்துக் கொண்டிருநதார்

இவவாறு பரம பக்தி நிறைந்த திருமலை நம்பிகள அன்புடன அனுதினமும் செயது வருகினற-பாபவிநாச தீர்த்தத்திலிருந்து திருமஞ்சனம் கொண்டு வருதலாகிய கைங்

(ஸ்ரீமத அனநதாாயா அருளிய ஸ்ரீ வேஙகடாசல-இதிஹாஸ மாலாவின தமிழ மொழிபெயாபபு)

கரியம் தன்னால் பரம ப்ரீதியோடு ஏற்றுக் கொள்ளப்படுகிறதென்னும இவ்விஷயததை மககள அனைவரும அறிந்து கொள்ளட்டும என்று ஆலோசிதத பகவான திருவேங்கட நாதன் ஒரு கால வேடனுருவம தரித்து வில்லும கையுமாய, பாபவி நாசததிலிருநது சுசியும ருசியுமான பெருமாள திருமஞசன தீாததததை மிக்க ஆதரததோடு எழுநதருளப பண்ணிக் கொண்டு வருகின்ற திருமலை நம்பிகளை நடுவழியில எதிர்ப பட்டு 'வாரீா தாத (அப்பா, தகப பனரே) தாகததினால் தவிக்கிறேன, எனக்குத் தண்ணீர் தாரும' என்று கேட்க, 'அடே வேடா வேஙகடத தானுககுக கொண்டு செலலும இத திவ்விய தீாத்தம மனிதருககு உரிய தன்று' என்று அவர் மறுததுவிடடுக் கலியன் அருளிய பெரிய திருமொழியை அனுஸநதித்துக கொணடே பகவானை அனுபவிபபதனா லுண்டான அதிகமகிழசசியுடன தீாத தககுடத்தை ஏந்திச சென்றுகொண டிருககும்போதே அவவேங்கடவனா கிய வேடன தானே அவா பின்னே தொடர்ந்து சென்று வில்லில் தொடுத்த அமபினால் மிகக ஸாமாத தியத்துடன் அககுடததைப பின் புறத்தில துளைத்துத் துளையுண்டாககி அதிலிருந்து சிறிய தாரையாகப புறபபட்டு வெளிவந்த நீரைப பூரண மாகப பருகினான

அததிருமலை நமபிகளோவெனில திருமங்கையாழவாா திருமொழியை அனுஸநதிததுக கொண்டு அதில் கூறபபடுகின்ற பகவானுடைய குண கணஙகளை அனுபவிபபதில மனம மூழகப பெறறதனால வேட வேஷம பூண்ட பகவானுடைய செயலைச சிறிதும அறியாமலேயே சிறிது தூரம சென்று, அதன பிறகு நீர் கசிவத னால மெலல மெலல இலேசாகி வருகின்ற குடததிலிருநது நீா வெளியே போயவிட்டதென்று அறிநது, இது என்ன என்று திருமுகததைப பின பக்கம திருப்பி நீாத தாரையைப பருகிக் கொண்டிருககும அவ வேடனைக கண்டு, 'அடேடே வேடா பாககியமற்றவனே பெருமாளுக் காகக கொண்டு செல்லும் தீாததத் தில ஏன இஙஙனம் துரோகம் செய தாய' என்று அவனை நிந்தனை செய்ய, 'ஓ அப்பா நீர் வருந்த வேண்டாம். இஙகு அருகிலேயே திவ்வியமான தீாததததைக் காட்டுகிறேன். அதிலிருந்து பெருமாளுககுத தீர்த்தம் கொண்டு செல்லும' என்று கூறி முன்னே செல்லும வேடனால வழி காட்டப பெறறு ஆகாச கஙகா தீாத்ததை அடைவிக்கப பெறறு, அபபோது அவவிடத்தில் தண்ணீர் தென்படாமலிருககப பிறகு அவ வேடன தன வில்லில அமபாக ஒரு துரும்பையேற்றி அங்குள்ளதொரு மலையுச்சியைத துளைத்து, பினபு அதனைக தைததுககொண்ட அம பைப பறறியிழுத்துப பிறகு அதி லிருநது பெருகி மிகவும் வேகமாகப பாயகின்ற நிாமலமான தாரையை யுடைய ஆகாசகஙகா நதியைக் காட்டி, 'ஓ அப்பா, இது ஆகாச கஙகையன்றோ, இது பகவானுககு மிகப பிரியமானதும ஆகும இனி மேல இதிலிருந்தே எனககுத தீாத் தம கொண்டு வாரும' என்று சொலலித தான பகவானென்பதை அறிவிதது மறைநதுவிட, இந்த ஆச் சரியத்தைக கண்டு, இதென்ன வியப்பு' பகவான திருவேங்கடநாத னுக்குத் தன்னைத் தருசமடைந்தவா திறத்தில் விளையாட்டுச சுவை மிக மிக வியபபை உண்டு பண்ணுகின றது என்று நினைத்து, அதனபினபு அவவாகாச கங்கையாற்றிலிருந்து குடத்தில தீர்த்தத்தை நிரபபிப பழையபடியே தீர்த்தக குடததைக கொண்டு வந்து கோவிலில திருவேங கடமுடையானுக்கு அருகில வைத் தனர்.

பின்பு திருவேங்கட நாதனும ஆச்சகரை ஆவேசித்து அவா மூல மாக, 'வாரீர் திருமலை நம்பிகளே நீர் கொண்டு வநத ருசியும் சுசியு மான திவ்ய தீாததததினால் நடுவழி யிலேயே எனக்குத் தாகம தணிந்து விட்டது' என்றுகூறி மகிழவித்து, அதன மூலமாக, அவர் திருமஞசனம் கொண்டு வரும் தொண்டு தனக்கு உயர்வறவுயர்ந்த அனபினை உண்டு

சனீஸ்வரன் கோயில் - திருநள்ளாறு

திரு வி. முத்துராமன் - கோவை.

பண்ணுகிறதெனபதை உலகோர் அனைவருக்கும் அறிவித்தருளினான்

அதன் பிறகு திருமலை நம்பிகளும் திருமஞ்சன தீர்த்தம் கொண்டு வருதலாகிய கைங்கரியத்தினால தம்மிடம் மிகவும் அதிசயித்த கருணையால் குளிர்ந்த பகவானது கடைக்கண்ணோக்கம் விழுந்தபடியை எண்ணித் தம்மை மிகவும் பாக்கியசாலியாக நினைதது, அதுமுதல் அக்கைங்கரியத்தில் மிகப் பற்றுடையவராய ஆகாச கஙகையிலிருந்தே தினமும் திருமஞ்சனம் கொண்டு வந்து ஸமர்பபித்துப பெருமானை ஸந்தோஷிப்பித்துக் கொண்டு எழுந்தருளியிருந்தார்.

மிகவுமுயர்ந்த ஸத்துவ குணம் புலனடக்கம் மனவமைதி முதலிய ஆத்ம குணங்கள் நிறைப் பெற்ற இத்திருமலை நம்பிகள், தம்மோடு ஒத்த அழகும் பண்புமுடைய தமது அபிமான புத்திரருக்குப பிள்ளைத் திருமலை நம்பிகளென்ற பெயர் உண்டான பிறகு பெரிய திருமலை நம்பிகளெனறும, ஆளவந்தாரது ஆணையினபடித் திருவேங்கடமலைக்கு வந்து நித்திய வாசம் செயது கொண்டு பெருமானுக்குத் தொண்டு புரிவதிலேயே மணடியிருக்கும்போது வேடனாக வந்த பகவான 'தாத' (அபபா) எனறு கூபபிட்ட பிறகு திருமலைதாததாசார்யரென்றும் பிரசித்தமான (இரு) பெயருடையவராக விளங்கினர்.

இங்ஙனம் பெருமானுக்கு அபிஷேக தீர்தத்ங் கொணர்நது தருங் கைங்கரிய மொனறிலேயே ஊன்றியவரும அதுவே காரணமாகப் பெருமானுடைய மிகவுயர்ந்த பிரீதிக்குக கொள்கல மானவரும பரம பாகவதர்களில் சாலச் சிறந்தவருமாகிய இத்திருமலை நம்பிகளுடைய திருவடிகளில் பேரன்பு படைத்த மனமுடைய பெரியோர்களால் எப்போதும் ஓதப்படுமவையாய், அவருடைய தொண்டு, அதனால மகிழ்ந்த பகவானுடைய சிறந்த அருளால் உண்டான பயன முதலானவைகளைக குறிப்பிக்கின்ற ச்லோகங்கள மூனறு உள்ளன. அவற்றின் கருத்து மேலே காண்க·

1. தாமரைக் கண்ணனான திருவேங்கடத்தான அஞ்ஜநாத்ரி (திருமலை)யில் யாவரொருவரை 'தாத' என்றழைத்து நீர் நிரம்பிய கலசத்திலிருந்து அன்புடன் நீரைப பருகினானோ அநதத் திருமலை நம்பிகளுககு (எனது) வணக்கம் உரிததாகுக. 2. வயதின முதிர்ச்சியாலுண்டான தளர்சசியையும் பாராமல பாபவிநாசத்தில் நீர் நிரப்பிய குடத்தைத் தலையில் வைத்துக் கொண்டு வருகினற திருமலை நம்பிகளை என்னும ஆசாரியரை 'தாத' என்று கூறித் தண்ணீரை யாசித்தான் வேட வேட(ஷ)மணிந்த திருமால். அவா நீர் தாராமையால் திருவின் மணவாளனாகிய அவ்வேடன அம்பெய்து குடத்தைத் துளைத்து அப்போது அந நீரைப் பருகினான். 3. பின்பு தீர்த்தம் திருடு போனதனால் திருமலை நம்பிகள் திருவுள்ளம் கலங்க, அவர் வருத்த முற்றதனால் கருணைகொண்ட வேடவுருவனான திருமால் அவரைக் கையைப் பற்றி அழைததுச் சென்று அஞ்ஜநாத்ரியில் (திருமலையில்) அம்

## தெரிந்து கொள்ளுங்கள் :

## ஏகாதசி

விரதங்களுள் ஏகாதசி ஏற்றமுடையது ஒவ்வொன்றிற்கும் அதிஷ்டான தேவதை உண்டு. ஒவவொரு நட்சத்திரத்திற்கும் ஓர் தேவதை உண்டு. பிரதமைக்கு அக்னி, துவிதியைக்கு நான்முகன திருதியைக்கு பார்வதி. இதுபோல் ஏகாதசிக்கு தர்மம் அதிஷ்டான தேவதை. தர்மம் நலியாமல் பூரண வளர்ச்சி பெற ஏகாதசி விரதம் அவசியம் தேவை. தர்மத்தை நாம் காத்தால் தர்மம் நம்மைக் காக்கும்.

## மயிலும் - பாம்பும்

முருகன் கையில் உள்ள வேல்-ஞானம் மயில்-விந்து சேவல்-நாதம ('நாத விந்து கலாதி' எனபதனால அறிக) பாம்பு-குண்டலினி என்ற பாம்பை ஓம் என்ற மயில் அடக்குகிறது.

## அட்ட வீரட்டத் தலங்கள்

திருக்கண்டியூர் – பிரமன சிரம் கொயதது.
திருவதிகை – முப்புரம் எரித்தது.
திருக்குறுககை – காமனைக் காயந்தது.
திருவிற்குடி – சலந்தாசுரனைக் கொனறது.
திருக்கோயிலூர் – அந்த காசுரனைக் கொன்றது?
திருக்கடவூர் – யமனை உதைத்தது.
வழுவூர் – யானை உரி போாத்தது.

## தட்சிணாமூர்த்தி

ஆனமாக்கள் வடக்கு நோக்கிச் செல்வது சரண யாத்திரை தெற்கு நோக்கிப போவது மரண யாத்திரை. ஆன்மாக்கள தனனை நோக்கி வருவதால் தட்சிணாமூர்த்தி ஆன்மாக்களை நோக்கித் தெற்கு முகமாக அமர்ந்து அருள் புரிகின்றார்.

திருமதி கமலா மாரியப்பன்-கோவை.

பெய்து ஆகாச கங்கா நதியை உண்டாக்கி, 'இத்தீர்த்தம் திருவேங்கடவனுக்குப் பிரியமானது ஆகையால் இதன் தீர்த்தத்தையே தினமும் எனக்குக் கொணர்ந்து தாரும்' என்று சொல்லிக் கடைசியில் மறைந்தான். (இதுவே அசகுலோகங்களின் கருத்து).

**திருமலை நம்பிகளின் மந்த்ரம்**

"பிதாமஹஸ்யாபி பிதாமஹாய ப்ராசேதஸாதேச பல ப்ரதாய, ஸ்ரீ பாஷ்யகாரோத்தம தேசிகாய ஸ்ரீ சைல பூர்ணாய நமோ நம ஸ்தாத்." (பிதாமஹர் எனப்படும் நான்முகக் கடவுளுக்கும் பிதாமஹராயும் = நான்முகற்குத் தந்தையான திருமாலுக்குத் தமப்பனாராயும், ஸ்ரீ பாஷ்யகாரராகிய இராமானுசமுனிவரென்ற மிகச் சிறந்த ஆசிரியருக்கு வானமிகியின் உபதேசமான ஸ்ரீ ராமாயணத்தின் ஸாரப் பொருளை உபதேசித்த ஆசாரியராயும் உள்ள திருமலைநம்பிகளுக்கு வணக்கங்கள். உரியனவாகுக ) இது அவரைப் பற்றிச் சிஷ்யர்கள் நாள்தோறும் ஓதும் மந்திரமாகும்.

**அவரது அவதார நக்ஷத்திரம்**

"ஸ்ரீமல் லக்ஷ்மண யோகீந்த்ர ஸ்ரீ ராமாயண தேசிகம், வந்தே ஸ்ரீசைல பூர்ணார்யம் மேஷே ஸ்வாதீஸமுத்பவம்". (ஸ்ரீமத் ராமாநுஜர் என்னும் முனிவர்பெருமானுக்கு ஸ்ரீ ராமாயணத்தைக் கற்பித்த ஆசிரியரும், சித்திரை மாதத்தில் ஸ்வாதி நக்ஷத்திரத்தில் தோன்றியவருமாகிய திருமலை நம்பிகளை வணங்கித் துதி செய்கிறேன் ) இது அவரவதார நக்ஷத்திரம் சித்திரை மாத ஸ்வாதி என்று அறிவிக்கும் ச்லோகம் என்பது நினைக்கத் தக்கது.

இந்தத் திருமலை நம்பிகளுக்கு, ராமானுஜர் என்று பெயருள்ள தமது குமாரர் பரமபதமடைந்த பின்பு தமக்குத் தக்க அழகும் குணமும் பெற்றவரும் அதுவே காரணமாகப் பிள்ளைத் திருமலை நம்பிகள் என்ற பெயரால் பிரசித்தி பெற்றுத் தோழப்பர் என்னும் மறுபெயர் கொண்டவரும் ஸகல வேதாந்தப் பொருள்களையும் ஆராய்ந்தறிந்தவருமான அபிமானமாக இசைப் பெற்ற குமாரர் ஒருவர் இருந்தார். மிகச் சிறந்த தெய்வ பக்தியுடையவரும் தம்மோடொப்ப நற்பண்புகளனைத்தும் அமைந்தவருமான அக்குமாரரிடமுள்ள எல்லையில்லாத அன்பினால் திருமலை நம்பிகள் 'தாத' (அப்பா) என்றே அழைத்து வந்ததனால் இக் குமாரருக்கு 'அப்பர்' என்ற பெயரும், ஸகல வேதாந்தக் கருத்துக்களையும் அறிந்த இவரை-திருவேங்கடமுடையான் ஒரு சமயம் ராமானுச முனிவருக்குக் கனவில் தோன்றி வாதியரை வெல்லும்போது துணை புரியும் தோழராகக் கொள்ளுமாறு கூறியதனாலும், பிறகு உடையவரும் எல்லாவுலகோர்க்கும் உபகாரமான மாயா வாதி விஜயத்தில் (அத்வைதிகளை வெல்லுவதில்) அனுகூலராகப் பெருமாளால் குறிக்கப் பெற்ற இத் திருமலைநம்பி குமாரரை உலகோரனைவர்களும் தோழராகவே பிரசித்தப் படுத்தியதனாலும் 'தோழர்' என்ற பெயருமாக இரண்டும் ஒன்று சேர்ந்து தோழப்பாசார்யர் என்னும் திருநாமம் இப்பிள்ளைத் திருமலை நம்பிக்கு மிகப் பிரசித்தமாக உண்டாயிற்று.

இவரைப் பற்றியும் இவ்வாறு மூன்று ச்லோகங்களைப் பெரியோர்கள் அனுஸந்தித்தனர்.

1. ஸ்ரீ பாஷ்யகாரரான ராமானுஜ முனிவருக்கு அத்வைத வாதிகளோடு (சங்கராசார்ய மதத்தவரோடு) வாதமென்னும் பந்தயம் தொடங்கிய போது, திருவேங்கடமுடையான ராமானுஜருக்கு இரவில் கனவில், பரஹ்மத்தோடு ஜீவனுக்கு ஒப்புமை ஒற்றுமை வேற்றுமை இவற்றைக் கூறும் வேதாந்த வாக்கியங்களுக்கு ஒன்றுக்கொன்று முரண்பாடு ஏற்படாமல் கூற வேண்டிய உட்கருத்துக்களை உபதேசித்துவிட்டு, எவரைத் தோழராகக் கொள்ளுமாறு கூறினனோ, எவரை ராமாநுஜ முனிவர் உலகோர் அனைவர்களும் தோழராக வெளியிட்டாரோ, திருமலை நம்பிகளின் (அபிமான) குமாரரான அந்தப் பிள்ளைத் திருமலை நம்பிகளைத் தியானம் செய்கிறேன். 2 பாரத்வாஜ கோத்திர (குல)மென்னும் கடலுக்குச் சந்திரன் போன்றவரும் ஜ்ஞான பக்திகளென்ற அமுதமுண்டாகும் கடல் போன்றவரும் திருமலை நம்பிகளின் (அபிமான) குமாரருமான தோழப்பாசாரியரைச் சிந்திக்கிறேன் 3. வேடவுருவம் பூண்ட திருவேங்கட நாயகன் 'தாத' (அப்பா) என்று அழைத்து வார்த்தையருளிய பின்பு எந்தத் திருமலை நம்பிகளின் மகிமை உலகில் பிரசித்தியை அடைந்ததோ, அந்தத் தாதருக்கும் தாதரும் (= அந்நம்பிகளால் 'தாத' (அப்பா) என்று கூப்பிடப்பட்டவரும்) பாரத்வாஜ குலத்தில் உதித்தவரும் தம்மைப் புகலாக நினைத்தவர்களுக்குப் புதையல் போன்றவரும் அறிவுக்குக் களஞ்சியமானவருமாகிய சிறிய திருமலை நம்பிகளைத் தஞ்சமடைகிறேன். இது அம்மூன்று ச்லோகங்களின் கருத்தாகும். (சிறிய திருமலை நம்பிகள் பிள்ளைத் திருமலை நம்பிகள் தோழப்பாசார்யர் என்ற இம்மூன்று பெயர்களும் ஒருவரையே குறிப்பன )

★

# குருவருள் பெற்ற குமரகுருபர முனிவர்

தமிழநாட்டில தாமிரபரணி நதியின வடகரையில திருவைகுண்டம வடபால ஸ்ரீ கைலசம எனும பகுதியிலபரமபரையாகத தமிழப புலமையும முருகப் பெருமானிடம அழியா பகதியும கொணட சைவ வேளாளா மரபில, சணமுக சிகாமணிக கவிராயருககும் சிவகாமசுநதரி அமமைககும குமரகுருபரன் பிறநதார் குமரகுருபரன ஐநதாண்டு வரையில ஊமையாக இருந்தாா பெறறோர்கள் மனம நொநது இருநதனர் ஒரு நாள குமர குருபரனைச திருசசெந்தூருககு அழைததுச சென்று சனனதியில கிடககச செயதனர் முருகப் பெருமானின திருவருளால குமரகுருபரா பேசும ஆறறல் பெறறுக கநதக் கடவுளமீது "கநதாகலி வெண்பா" பிரபநததைதப பாடினார். பினனா தம ஊரில் உளள அருளமிகு கைலாச நாதாமீது "கைலைக் கலமபகம" பாடினா தமிழ, இலக்கண இலககியஙகளையும், ஞான சாத்திரங்களையும இறையருளால கற்ற குமர குருபரன் பல சிவதலஙகளுககுச சென்று இறைவழிபாடு செயத வணணம இருநதாா. மதுரையிலே சில காலம தஙகி இருந்தார் அது பொழுது அஙகயறகண்ணியாகிய மீனாட்சி அமமைமீது பிளளைத் தமிழ பாடி அக்காலத்தில மதுரையை ஆணடு வநத திருமலை நாயககா முனனிலையில அரங்கேறறினா. அதனை அரங்கேறறிய காலையில அனனை மீனாட்சியே குழநதையுருவாகவே எழுநதருளி கேட்டு மகிழநதாள் எனறும் குமரகுருபரா முததைப் பருவததை அரங்கேறறிக கொண்டிருககையில தம திருககழுத்திலிருநது முத்து மாலை ஒனறை எடுததுக குமரகுருபரருக்கு அணிவித்துவிட்டு மறைநதனரென்றும கூறுவர். அபபிள்ளைத் தமிழைக் கேட்டு மகிழசசி அடைநத் திருமலை நாயக்க மனனன உயாநத சனமானங்களை அளித்து வழிபட்டாா. பினனர் குமர குருபரர் சில காலம் மதுரையிலே தஙகி மதுரைக் கலம்பகம எனனும பிரபநததைதை இயற்றினார் பினனர் சோழ நாட்டுத் தலஙகளைத் தரிசிககத தொடஙகித் திருவாரூர் சென்றாா. அங்கே அருளமிகு கமல வசநத தியாகராஜப பெருமானை வழிபட்டுக் கொண்டு சில காலம் இருநத போழுது திருவாரூர் நான்மணிமாலை யென்னும பிரபந்ததைதை இயற்றினாா. சில காலமாக தனககு சிவஞான உபதேசம் பெற வேணடும எனற எணணம் ஏறபட்டுக கொண்டேயிருநதது. தனககுரிய ஞானசிரியப பெருமானை சரண் புகுந்து அருள் பெற எண்ணுகையில இறையருளால் அககாலததில தமிழபபற்றும் சைவபபற்றும கொணடிருந்த தருமபுர ஆதீனத்து நானகாவது குரு மஹாசனனிதானமாக விளங்கிய சீலத் திருமாசிலாமணி தேசிகா அவர்களைத் தரிசிககச சென்றாா அஙகே ஏற்பட்ட சில குறிபபுககளால அப பெரிய மகானே தமக்கு ஞானாசிரியன் என எணணி அவர்களிடம் தமககுத துறவு நிலை அருள வேண்டினாா. குரு மூாததிகள துறவு நிலை பெறுவதறகுமுன, தல யாததிரை செயது வருமபடி பணிததல அவ ஆதீன மரபாதலின காசி யாததிரை சென்று வரும்படி ஆணையிட்டாா காசிக்குச சென்று வருவதில நெடுங்காலம செலலுமேயென்று கவனற குமர குருபரரை நோககிச சில காலம சிதமபரததில வாசம செயயுமபடி பணித்தாாகள ஞானாசிரியன ஆணையின வண்ணம சிதமபரத்துககுச செல்லுகையில் வழியில் புளளிருககு வேலூரில வழிபட்டு அருள்மிகு செலவ முததுக குமரப பெருமான மீது ஒரு பிள்ளைத் தமிழ் இயற்றினார். பிறகு தில்லைச சென்று கூத்தபபெருமானை வழிபாடு செய்து கொண்டு சிலகாலம தங்கி சிதம்பர மும்மணிககோவையென்னும் பிரபந்ததததை இயற்றினாா சைவ அன்பர்களும, தமிழ்ப்பறறு கொணடவர்களும் "யாப்பருங்கலக்காரிகையில் காணப்படும் உதாரணச் செய்யுட்கள் பெரும்பாலும் ஜைன சமயச் சார்வுடையனவாக இருததலின அநநூலின இலக்கணங்களுக்கு உதாரணமாக நடராஜப பெருமான்மீது செய்யுட்களை

**குத்தாலம் பாலச்சந்திரன்**

இயற்றித் தர வேண்டும்" என பிரார்ததிக்க அங்ஙனமே சிதம்பர செயயுட் கோவை யென்னும பிரபந்ததததை அருளினார் தில்லையில இருநத காலததில நீதி நெறி விளக்க நூல இயறறினாா பினனா சிதமபரததிலிருந்து தனது ஞானாசிரியரைத தரிசிகக, இவரின் பரிபக்குவததை அறிநது ஞான தேசிகர் காஷாயம வழங்க அதுமுதல இவருககு குமரகுருபர முனிவர் எனப பெயா வழங்கலாயிறறு. அது போழ்து தனது ஞானாசிரியர்மீது பண்டார மும்மணிக கோவை பாடினார் அவாகளிடம் விடை பெறறுக் காசிச சென்று தமமுடைய தவ வலிமையாலும கலவித்திறனாலும டில்லியின அது போழ்து ஆண்ட பாதுஷாவின உளளத்தைக கவாந்தாா அப்பாதுஷாவின தாயமொழியாகிய இந்துஸ்தானியை அறிய சகல கலாவலலி மாலை எனும் பிரபந்தத்

## தி. தி. தேவஸ்தானத்தாரின
# ஸ்ரீ பத்மாவதி தாயார் கோயில், திருச்சானூர்
## தினசரி நிகழ்ச்சி நிரல்கள்

காலை

5-00 முதல 5-30 வரை—சுபரபாதம
5-30 ,, 6-00 ,, —ஸகஸரநாம அாசசனேரூ.6-50 (நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)
6-00 —நித்ய அர்சசனே (வருடததிற்கு ரூ 150/- செலுத்தும கிருஹஸதர்கள் பஙகேற்கலாம்)
6-15 ,, 6-45 ,, —சுததி—முதலமணி
6-45 ,, 1-00 மதியம்—ஸாவதரிசனம
1-00 ,, 1-30 ,, —சுத்தி, 2-வது மணி
1-30 ,, 7-00 இரவு —ஸாவதரிசனம
7-00 ,, 7-30 ,, —சுததி, இரவு மணி
7-30 ,, 8-30 ,, —ஸர்வதரிசனம்
8-30 ,, 9-00 ,, —ஏகாநதசேவை

காலை

## வெளளிக்கிழமைகளில

4-00 ,, 4-30 ,, —ஸாவ தரிசனம்
4-30 ,, 5-00 ,, —ஸகஸ்ரநாம அர்ச்சனே ரூ. 6-50 (நான்கு நபர்கள் அனுமதிக்கப்படுவர்)
5-00 ,, 5-15 ,, —நித்ய அர்சசனே
5-15 ,, 5-45 ,, —சுத்தி, முதல் மணி
5-45 ,, 7-00 ,, —ஸர்வதரிசனம
7-00 ,, 7-30 ,, —சாலிமபு
7-30 ,, 9-00 ,, —தாயாருககு அபிஷேகம (ரூ: 100/- செலுத்தி இரு நபர்கள் பங் கேற்கலாம்)
9-00 ,, 10-00 ,, —அலங்காரம, 2வது மணி
10-00 ,, 8-00 இரவு —ஸர்வ தரிசனம்
7-00 ,, 8-00 ,, —கண்ணுடி மண்டபத்தில் ஊஞ்சல சேவை. (ரூ. 150/-செலுத்தி பங்கேறகும இரு நபர் களுக்கு சுமாா 5 கிராம் எடையுள்ள வெள்ளிப பதககம் வழஙகபபடும)
8-00 ,, 8-30 ,, —இரவு மணி
8-30 ,, 9-00 ,, —ஏகாநதசேவை

## ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

I தரிசனம்—சிறபபு நுழைவுக் கட்டணம ரூ. 2/- (நபர் ஒருவர்க்கு)

II ஆர்ஜிதம

| | | |
|---|---|---|
| (அ) பொங்கல ½ அளவு | | ரூ. 55/- |
| (ஆ) புளியோரை | ,, | ரூ. 50/- |
| (இ) ததயோதனம | ,, | ரூ. 40/- |
| (ஈ) கேஸரிபாத | ,, | ரூ 85/- |
| (உ) சர்க்கரைப் பொங்கல | ,, | ரூ. 65/- |
| (ஊ) தோசைப்படி | ,, | ரூ: 35/- |
| (எ) ஸாகரபாத | ,, | ரூ. 90/- |
| (ஏ) ஸீரா | ,, | ரூ.155/- |

III சேவைகள்

| | |
|---|---|
| (அ) நிதய அாச்சனே (ஆணடொனறுககு) | ரூ. 150/- |
| (ஆ) ஸகஸரநாமஅர்சசனே | ரூ. 6-50 |
| (இ) அாசசனே | ரூ 1-00 |
| (ஈ) ஹாரததி | ரூ. 0-50 |
| (உ) பூராபிஷேகம (வெளளிக் கிழமையில மட்டும) | ரூ 100-00 |
| (ஊ) ஊஞசல சேவை (வெள ளிககிழமை மாலையில மட்டும்) | ரூ.150-00 |
| (எ) திருசசி உற்சவம் | ரூ. 63-00 |
| (ஏ) யானே வாகனம | ரூ. 32-00 |

* திருபபதியிலிருந்து 3 கி.மீ. தொலேவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதியுண்டு.

தைப் பாடி கலேமகளே வேண்டினுர். கலேமகளின் கடாக்ஷததினுல் பாது ஷாவின் அன்பைப பெற்ருர். இவா விருபபததினபடி காசியில இருத்தற குரிய மடம அமைப்பதற்குககேதாரக கட்டத்தில் இடம வழங்கினுா அது காறும மறைத்து வைககபபட்டிருநத ஸ்ரீ விசுவலிங்கப பெருமானே வெளிபபடுத்தி அஙகே கோயில் முத லியன நிருமிககச செயது நிததிய, நைமிததியஙகளும சிறபபாக நடை பெறுமபடி செயதார்

குமரகுருபரா காசியில் தங்கி யிருந்த மடத்திறகு குமாரசாமி மடம எனப பெயர். அங்கேயே இவா பரிபாலனம செயதுகொணடு காசியில் உளள விநாயகா மீது காசித துணடி விநாயகா பதிகமும், காசிக கலமபகமும இயற்றினுா. இவரிடம் மிகுந்த அன்புகொண்ட ராமபக்தராகிய துளசிதாசர் இவரின் சமயப் பிரசாரத்தில ஈடுபட்டு லயித் தாா எனவும கூறுவர்.

இவாகள் ஒரு வைகாசி மாதத தில கிருஷ்ணபக்ஷ திதியில காசி விசு வேசர் திருவடியில் அமர்ந்தார். அமமுனிவாபிரானுல்தோற்றுவிக்கப பெறற காசிமடம திருப்பனந்தாளில தலேமை இடமாகக கொணடு அவர் வழிவநத காசிவாசி கயிலே மாமுனி வர் முததுககுமரசாமி தமபிரான் சுவாமிகள பல சமய நூல்களே வெளி யீடு செயதும, அறப்பணிகள செய வதை அஙகமாகக கொணடும அவா வழியில் தருமை 4வது குரு மூர்ததியை குமரகுருபர முனிவா குருவாகப பெற்றது போல இப பொழுது தருமை 26வது குரு மஹா சன்னிதானம ஸ்ரீலஸ்ரீ ஷண்முகதேசிக ஞான சமபந்த பரமாசசார்ய சுவாமி களேக குருவாகப பெற்று, அவர்கள குமரகுருபரரை சீடராகப பெற்றது போல ஸ்ரீமுத்துககுமர முனிவரை அவாகள சீடராகப பெற்ற பெருமையானதுசைவ உலகத்திறகுப பெரும பேருகும ★

# ★ கீதை காட்டும் நல்வழி ★

திரு டி. கே நாராயணன், M S c,. M Phil.
ஆசிரியர் ''சமயஜோதி'' மதுரை.

## புருஷோத்தம யோகம்

### அத்தியாயம்—15.

### பகுதி—13.

இநத உலகமும, உலகிலுள்ள அனைததுப பொருள்களும் ஓயாது மாறறம அடைந்துகொண்டே இருக கின்றன அவை அனைததும 'க்ஷரம' எனப்படுகின்றன. भवन्तीति भूतानि—பவந்தி இதி பூதானி'— எந்த ஒன்று உணடாகிறதோ அது பூதம் எனபபடுகிறது क्षर. सर्वाणि भूतानि'—தோற்றத்தில் உள்ள அனைத்தும க்ஷரன். எநத ஒன்று தோனறுகிறதோ அது அழிந்தாக வேணடும். தோற்றமும் மறைவும ஒரு நாணயத்தின இரு பககங்கள் போன்றவையாகும

கடலில அலையும, நீர்க்குமிழியும தோன்றுகின்றன. உடனே மறைகின்றன; வானத்தில் யானை போன்ற உருவில் மேகம தோன்றுகிறது. மறைகிறது. இவவுடல தோன்றுகிறது. சில காலம கழித்து மறைகிறது. இநத பூமி, சந்திரன், சூரியன் எணணற்ற நட்சததிரஙகள ஒரு காலத்தில தோன்றின. எனறு வது ஒரு நாள இவை மறைநது போம. புல முதல பிரமமா வரை அனைத்தும தோன்றி மறைபவை. எனவே அவை க்ஷரன் எனறு அழைக்கப்படுகின்றன.

शीर्यतेति शरीरम्—(சீரயதேதி சரீரம)—தளாவுறுவதால இது சரீரம என அழைககபபடுகிறது. தலைமுடி உதிரும், தலை வழுககையாகும, பல் விழுந்து வாய பொககையாகும, பளபளவென்றிருநத தோலில சுருககங்கள் விழும்; கணணில் ஒளி குன்றும். காது கேடகும சக்தியை இழககும. இதுதான் சரீரத்தின தன்மை

உருது மொழியில் (शरारत) மாறறத்துககுள்ளாவது எதுவோ அதுவே சரீரம எனபபடுகிறது எவவளவு தான பககுவமாயப் போஷித்தாலும், அத்தரும சென்ட்டும், புனுகும பவுடரும ஜவவாதும் அப்பினலும, இந்த உடலில் நாற்றம ஏறபடுவதையும் தளர்சசி உண்டாவதையும், சுருக்கங்கள் விழுவதையும் எவராலும தடுக்க முடியாது. அது மாற்ற முடியாத இயறகையின் நியதி ஒரு மாபெரும் சகதி. க்ஷர புருஷனின தனமை இதுவேயாகும कूटस्थोऽक्षर उच्यते—'கூடஸ்தோ அக்ஷர உச்யதே' ஒரு உதாரணத்தால கூடஸ்தனை விளககலாம். பானையில உள்ள மண் 'கூடஸ்தன்' அல்லது அக்ஷரன ஆகும. பானை க்ஷரம். கயிற்றினில் தெரியும் பாம்பு க்ஷரம், கயிறு அக்ஷரம. கொலலன் பட்டறையில் உள்ள உலைக்களத்திற்கு 'கூடம்' எனறு பெயர். அந்த உலையின மீது அவன் தங்கத்தைக் கம்பியாகவும், சங்கிலியாகவும், மோதிரமாகவும, நெக்லஸ்ஸாகவும் இன்னும எபபடியெல்லாமோ மாற்றியமைககிறான் இத்தனை மாற்றங்களுக்கிடையில் அநத உலைககளம் எந்த வித மாற்றமும அடையாதிருக்கிறது. எனவே அது அக்ஷரன எனபபடுகிறது

நீர கிணற்று நீர, மழை நீர, ஆற்று நீர், குளத்து நீர், கடல நீர, ஏரி நீர, குழாய நீர் என்று பறபல வடிவமும பெயரும எடுக்கிறது. இத்தனை வடிவஙகளும் க்ஷரம் அல்லது அழியக் கூடியவை. ஆனால நீரோ பிரளய காலம வரை நிலைத்திருப்பது. எனவே அது அக்ஷரம்.

வெவவேறு வடிவங்களையும், மாயக் காட்சிகளையும் காட்டவல்லது கூடஸதன் எனபபடுகிறது.

க்ஷரன், அக்ஷரன் இரணடிறகும் அப்பாற்பட்ட பரமாத்மன் எத்தகையவா எனற விளக்கம் அடுத்த சுலோகத்தில் வருகிறது.

> உத்தம புருஷஸ்த்வன்ய:
> பரமாத்மேத்யுதா ஹருத: |
> யோ லோகத்ரயமாவிச்ய
> பிபர்த்யவயய ஈச்வர : ‖ (15-17)

'இவைகட்கு அன்னியமானவர் புருஷோத்தமன். அந்த ஈசுவரன் பரமாத்மா என அழைக்கப்படுகிறார். அவர் மூவுலகினுட புகுந்து அதைத் தாங்குகிறார்'.

பொன் ஆசாரி ஒருவன் தங்கக் கட்டி ஒன்றை எடுத்து சங்கிலி ஒன்றைச் செயய முனைகிறான். முதலில் அவன் தங்கக் கட்டியை பாளமாக ஆக்குகிறான். பிறகு அதை நீண்ட கம்பிகளாக மாற்றி, அதன் பின் அதைச சிறு சிறு துணடுகளாக ஆக்கி, ஒவ்வொரு சிறு துண்டையும் வளையமாகச் செய்து, பின் ஒவ்வொரு வளையத்தையும பிறிதொன்றுடன் பற்ற வைத்து சங்கிலியாக்குகிறான. சஙகிலி தங்கத்தாலானது. அதன் ஆரம்பநிலையும் தங்கக் கட்டியே. இடை நிலையில் அது பல பெயாகளையும், உருவங்களையும் பெற்றாலும் தஙகமாகவே இருககிறது. பாளம, சிறு துண்டுகள், கம்பி, வளையம் யாவும் தங்கத்தின் வெவ்வேறு தோறறங்களேயாம்.

அது போல ஒரே புருஷோத்தமன் க்ஷரன், அக்ஷரன் என்ற பெயர்களில் தோற்றமளிக்கிறான்.

எனது குழந்தைகளுக்கு நான் தந்தை என் தந்தைக்கு நான் மகன். எனது அலுவலகத்தில் நான் கலெக்டர் அந்த கலெக்டர் பதவி போனாலும், எனது குழந்தைகள் மரித்தாலும், என் தந்தை இறந்தாலும் எனது வாழ்நாள் வரை 'நான்' தொடர்ந்து இருப்பதைப் போல பரமாத்மன் என்றும் உள்ளது: அது க்ஷரன், அக்ஷரன் இரண்டிற்கும் அப்பாற்பட்டது

பதிமூன்றும் அத்யாயத்தில் க்ஷேத்ரம், மற்றும் க்ஷேத்ரக்ஞனைப் பற்றி விரிவாகப் பேசப்பட்டது க்ஷேத்திரக்ஞனிலிருந்து க்ஷேத்திரத்தை நீக்கிவிட்டால் எஞ்சுவது 'க்ஞ'வேயாகும் இந்த 'க்ஞ' க்ஞானத்தைக் குறிக்கிறது அதாவது அறிவோனிடமிருந்து அறியப் படுபொருளை நீக்கிவிட்டால் எஞ்சுவது அறிவேயாகும். க்ஷேத்ரக்ஞ— க்ஷேத்ரம=க்ஞ(ஞானம்)

இதை ஒரு சிறிய உதாரணத்தால் விளக்கலாம். ஆகாயம் பஞ்ச பூதங்களில் ஒன்று எங்கும் நிறைந்திருப்பது நீக்கமற எதிலும் வியாபித்திருக்கிறது ஒரு பானைக்குள்ளும் ஆகாயம் இருக்கிறது அந்தப் பானை இருக்கும் அறைக்குள்ளும் அது இருக்கிறது அறைக்கு வெளியேயும் அது எங்கும் பரந்து விரிந்து உள்ளது. பானைக்குள் இருக்கும் ஆகாசம் அல்லது வெளி 'கடாகாசம்' எனவும், அறைக்குள் இருக்கும் ஆகாசம் 'மடாகாசம்' என்றும், அதற்கு வெளியே எங்கும் நிறைந்து இருக்கும் ஆகாசம் 'மஹாகாசம்' என்றும் அழைக்கப்படுகிறது பானை உடைந்து விட்டால் 'கடாகாசம்' என்ன ஆகிறது? கடாகாசம் மடாகாசத்தில் கலந்து விடுகிறது என்று சொல்லுவோம். இது சரியா? இல்லை. தவறு. ஒன்று மற்றதுடன் எப்பொழுது கலக்கும்? முன்பு பிரிந்து இருந்தால்தான் இப்பொழுது சேர முடியும். பிரிவே இல்லையெனில் கலப்பது எப்படி? பானையின் மண் பகுதி மற்றும் அறையின் சுவர்கள் மஹாகாசத்திலிருந்து மடாகாசத்தையும், கடாகாசத்தையும் பிரித்துக் காட்டியது போன்றதொரு தோற்றத்தை ஏற்படுத்தின அவ்வளவுதான். ஆனால் உண்மை எது? உள்ளது ஒன்றே. அதுவே மஹாகாசம் அல்லது அண்டாகாரப் பெருவெளி அறையின் சுவர்கள் மற்றும் பானையின் மண்பகுதி உபாதிகளாயமைந்தன. உபாதி இல்லாதாகின்றபொழுது தத்துவம் தன்மயமாய் விடுகிறது

அதுபோல உள்ளது பரமாத்மா ஒன்றே உபாதிகளின் காரணமாக அது க்ஷரன், அக்ஷரன் என்று அழைக்கப்பெற்றது உபாதிகள் இல்லாதாகும் பொழுது அனைத்தும் அந்த ஒன்றில் லயமாகின்றன.

'யோ லோகத்ர மாவிச்ய பிபாதி'— எவர் மூவுலகிலும் பிரவேசித்து தாங்குகிறாரோ! எந்த மூவுலகங்களா? ஸ்வர்க லோகம், பாதாள லோகம், பூலோகமா? பூலோகம், புவர் லோகம், சுவர்க்க லோகமா? நமக்கு இந்தப் பூவுலகத்தைத் தவிர சொர்க்க லோகமும் தெரியாது, பாதாள லோகமும் தெரியாது. ஆனால் பகவான் இங்கே குறிப்பிடும் மூன்று உலகங்களும் நம்முள் பிரத்தயக்ஷமாய் உள்ளன ஜாக்ரத், ஸ்வபன, ஸுஷுப்தி என்ற மூன்று நிலைகளே அவை. நனவுலகம், கனவுலகம், ஆழ்ந்த நித்திரையுலகம் என்று அவற்றைக் குறிப்பிடலாம். நனவு நிலையைப் பற்றி மிகவும் பெரிதுபடுத்தும் மக்கள் மற்ற இரண்டு நிலைகளைப் பற்றிச் சிந்திப்பதில்லை. ஆழ்ந்த நித்திரையில் தமோ குணம் ஆட்சி செலுத்துகிறது. பாதாளம் அல்லது நரகமும் தமோ குணத்தின் விளக்கமேயாகும். ஜாக்ரத், சொப்பன ஸுஷுப்தி நிலைகள் சொர்க, நரக, மர்த்யு லோகத்திற்கு நிகர். இந்த மூன்று நிலைகளிலும் நமது பலவேறு அனுபவங்களுக்கு பரமாத்மாவே, அடிப்படையாயமைகிறார் 'லோகத்ரயம்'—என்பது மூன்று வகையான சிருஷ்டியையும் குறிக்கும் ஸத்வ, ரஜோ, தமோ குணங்களின் ஆதிக்கத்திற்கேற்ப அவை வேறுபடுகின்றன. மரம், கல் போன்றவை தமோ குணம் மிக்கவை. பறவை விலங்கு, மனிதன் ஆகியவை ரஜோ குணமும் தேவதைகள் ஸத்வ குணமும் மிக்கவையாகும் 'ஸத்வ குணத்தில் உறுதி பெற்றோர் சொர்க்கலோகம் போன்ற மேலுலகங்களையும், ரஜோ குணம் மிக்கோர் மத்தியில் உள்ள இம்மனித உலகத்தையும், தமோ குணம் மிக்கோர் இதைவிடக் கீழான நரகலோகத்தையும் அடைகின்றனர்', என்று கீதையில் பகவானே பிறிதொரு இடத்தில் பகருகிறார் மூன்று உலகங்கள் இவையேயாகும் அந்தப் பரமாத்மா எத்தகையவர் என்பதை 'அவ்யய' 'ஈசுவரன்' என்று அடுத்து வரும் இரு வார்த்தைகள் குறிக்கின்றன.

மூன்று உலகங்கள் அல்லது ஜாக்ரத முதலான மூன்று நிலைகளில் என்ன மாறுதல் ஏற்பட்டாலும் பரமாத்மா ஒரு மாற்றமும் அடையாதவர் என்பதை 'அவ்யய' என்ற பதமும், உபாதிகளால் சிறிதும் பாதிக்கப்படாதவர் என்பதை 'ஈசுவரன்' என்ற பதமும் குறிக்கின்றன. அனைத்துக்கும் சாட்சியாய் இருந்து கொண்டு எதனாலும் சிறிதும்—பாதிக்கப்படாது இருப்பதுவே பரமாத்மாவின் தனிச் சிறப்பு.

இனி 'புருஷோத்தமன்' என்ற வார்த்தையின் சிறப்புத் தன்மையை, உண்மைப் பொருளை பகவான் அடுத்த சுலோகத்தில் விளக்குகிறார்.

(தொடரும்)

# பதி உண்மை

உலகம் தோன்றிய நாள் முதலாகவே ஒரு வகையில் சமயம் என்பது தோன்றிவிட்டது என்று கூறிவிடலாம். சமயம் என்பது இறைவனுக்கும் உயிர்களுக்கும் உள்ள தொடர்பினை விளக்கிக் காட்டி உயிர்களை நன்னெறியில் - நல்லொழுக்கத்தில் ஒழுகுமாறு செய்வதாகும். உலகில் தோன்றி நிலவும் சமயங்கள் பலவும், இறைவன் இருக்கிறான் என்பதனை ஒப்புக் கொள்கின்றன. இறைவனை ஒப்புக் கொள்ளாத சமயங்கள் சிலவும் உள்ளன எனினும், இச்சமயங்களும் ஏதேனும் ஒரு வகையான வழிபாட்டை அடிப்படையாகக் கொண்டுள்ளன. வழிபாடு என்னும் போது வழிபடும் பொருள் ஒன்று இருக்கத்தானே வேண்டும்? அப்பொருளையே பதி - இறை - கடவுள் - ஆண்டவன்-பரம்பொருள் எனப் பல பெயர்களால் குறிக்கிறோம்.

பதி என்னும் சொல்லுக்குத் தலைவன் என்பதும், இறை என்னும் சொல்லுக்கு உலகங்களைத் தாங்குபவன் என்பதும், கடவுள் என்னும் சொல்லுக்கு மனம் மொழி மெய்களைக் கடந்து நிற்பவன் என்பதும், ஆண்டவன் என்னும் சொல்லுக்கு அனைத்தையும் ஆள்பவன் என்பதும், பரம்பொருள் என்னும் சொல்லுக்கு மேலான பொருள் என்பதும் பொருளாகக் கூறப்படும்.

இறைவனின் பொதுப் பெயர்களாக வழங்கும் இவை போன்று வேறு பல சொற்களாலும் இறைவனைப் பெயரிட்டு வழங்குவர். இப்பெயர்கள் அனைத்துமே இறைவன் தான் மேலானவன் என்பதைத் தெளிவாக எடுத்து இயம்புகின்றன.

ஆனால், உண்மையில் இறைவனுக்கென்று ஒரு பெயரும் இல்லை, ஒரு வடிவமும் இல்லை. நாம் வழங்குவதற்கும் வழிபடுவதற்கும் வசதியாகவே ஆண்டவனுக்குப் பல பெயர்களையும், பல வடிவங்களையும் அமைத்து மகிழ்வடைகிறோம்.

ஒருநாமம் ஓருருவம் ஒன்றுமிலார்க்
காயிரம்
திருநாமம் பாடிநாம் தெள்ளேணம்
கொட்டாமோ!

என்னும் மணிவாசகர் வாக்கும் இதனையே வலியுறுத்துவதைக் காணலாம்.

இறைவன் இருக்கிறானா? இல்லையா? என்னும் வினா உலகம் தோன்றிய நாளிலிருந்தே இருந்து வருகிறது. அறிவுள்ள மனிதன் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐந்து வகையினாலும் உலகில் உள்ள பொருள்களை அறிந்து கொள்கிறான். ஆனால், மெய் வாய் கண் மூக்கு செவி எனப்படும் ஐந்து பொறிகளினாலும் இறைவனை அறிய முடியாது என்று ஆன்றோர் கூறுகின்றனர். எனவே இறைவனை எளிதாக நம்மால் அறிய முடிவதில்லை என்பதனால், இறைவனே இல்லையென்று சிலர் விரைந்து கூறிவிடுகின்றனர். இது இயல்பு தானே! ஐம்பொறிகளாலும் — ஐம்புலன்களாலும் அறிய முடியாதவனாக ஆண்டவன் இருப்பதனால் ஆண்டவன் இருக்கிறான் என்பதை எப்படித்தான் அறிந்து கொள்வது?

உலகில் காணப்படும் உயிர்கள் ஆண் பெண் என்ற பாகுபாட்டினையுடையனவாகக் காணப்படுகின்றன. உயிரற்ற பொருள்களும் உலகில் காணப்படுகின்றன. இவை யாவும் தோன்றுவதையும் நிலை பெற்று வாழ்வதையும் முடிவில் அழிந்து போவதையும் நாம் கண் கூடாகக் காண்கிறோம். இவையனைத்தும் தாமே தோன்றி வளர்ந்து அழிந்து போகின்றனவா? யாரேனும் இவற்றையெல்லாம் ஆக்கி அளித்து அழித்து வருகின்றனரா? இவ்வாறு நமக்குள் ஐயம் எழுவது இயல்பு தானே!

ஆக்குபவன் ஒருவன் இல்லாமல் உலகில் எந்தப் பொருளும் உண்டாவதில்லை என்பதை நாம் தெளிவாக அறிகிறோம். எனவே நம்மால் காணப்படும் உயிருள்ள பொருள்களும் உயிரற்ற பொருள்களும் தாமே தோன்றியிருக்க முடியாது. இவையனைத்தையும் யாரேனும் ஒருவர்தான் தோற்றுவித்திருக்க வேண்டும். தோற்றுவித்த அவரேதான் அவற்றையெல்லாம் காப்பதற்கும் அழிப்பதற்கும் உரிய வல்லமை பெற்றவராக இருத்தல் முடியும். இத்தகைய வல்லமையுடைய ஒருவனையே சான்றோர்கள் இறைவன் என்று பெயரிட்டு அழைக்கின்றனர்.

திரு. மா சீதாராமன்-பெருங்கட்டூர்.

உலகம் யாவையும் தாமுள வாக்கலும்
நிலைபெறுத்தலும் நீக்கலும் நீக்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவர் அன்னவர்க் கேசரண்
நாங்களே.

என்கிறது கம்பராமாயணக் கடவுள் வாழ்த்துப் பாடல். இப்பாடல் மூலம் உலகிற்கு ஒரு தலைவன் இருக்கிறான் என்னும் உண்மை புலனாகின்றதன்றோ!

விளையாட்டாகவே உலகங்களை ஆக்கியும் காத்தும் அழித்தும் வருகின்ற ஆற்றல் உடையவனாக இறைவன் விளங்குகிறான் என்றால், அவனை நம்மால் காண முடிவதில்லையே!

காண முடியாத கடவுளை இருக்கிறான் என்று எப்படி நம்புவது?

உலகிற்கு ஒளி தருபவன் சூரியன் அவனை நம் கண்களால் காண்கிறோம். எனவே சூரியன் இருப்பதனை நாம் உண்மையில் காண முடிகிறது.

ஒரு பொருளை நாம நன்றாகக் காண வேண்டுமானால் நமக்குக் கண்கள் வேண்டும். நாம் காணும் பொருள்கள்மீது சூரியனின் ஒளி படுதல் வேண்டும். அப்போதுதான் நாம பொருள்களைத் தெளிவாகக் காண முடியும்.

கண் பார்வையற்ற குருடனால் பொருள்களைக் காண முடியுமா? முடியாது பொருள்களையே காண முடியாத போது சூரியனை அவன் எவ்வாறு காண முடியும் குருடனின் கண்களுக்கு உலகில் உள்ள பொருள்களும் சூரியனும் புலனாகவில்லையென்பதனாலேயே, உலகில் காணப்படும் பொருள்களும் ஒளி தரும் சூரியனும் இல்லாமல் போயவிடுமா?

கண்களும் பார்வையுடையதாக இருந்து, சூரிய ஒளியும் பொருள்களின்மேல படும்போதுதான் பொருள்களை நம்மால் காண முடிகிறது என்பதை அறிகின்றோம் அது போலவே ஆண்டவனை அறிய வேண்டும் என்கின்ற தெளிவான மனமும் இருந்து, ஆண்டவனின் அருளாகிய ஒளியும் நமமீதுபடும்போதுதான் ஆண்டவனை அறிய முடியும

குருடடுத தன்மை நீங்கப் பெற்ற கண்கள் பொருள்களைக் காணும் ஆற்றல் பெறுதல் போலவே, ஆணவம் எனப்படும் இருட்டு நீங்கப் பெற்ற உயிர்களே இறைவனைக் காணும ஆற்றலைப் பெறுகிறது

இறைவனைக் காண வொட்டாமலும், இறைவனோடு சேர வொட்டாமலும் உயிர்களைத் தடுத்து நிறுத்துபவை ஆணவம, கன்மம, மாயை எனப்படும் மும்மலங்களாம. மலமற்றவனாகிய இறைவனைக் காண இம்மும்மலங்களையும் அகற்றல வேண்டும இம்மலங்களை நீக்குதற்குரிய வழிதான யாது? அமலனாகிய ஆண்டவனின திருவடிகளை நாம பற்றிக் கொள்வோமானால், மும்மலங்களும நம்மைவிட்டுத் தானாகவே அற்றுப் போகும

பற்றுக பற்றற்றான பற்றினை அப
பற்றைப

பற்றுக பற்று விடற்கு

என்னும திருவள்ளுவர் திருவாக்கையும் நோக்குக.

ஆணவம், கன்மம, மாயை ஆகிய மும்மலங்களால் மறைக்கப்பட்டிருக்கும் வரை உயிர்களால் ஆண்டவனைக் காண முடியாது இம்மலங்கள் உயிர்களிடம் எப்போது வந்து சேர்ந்தன?

செம்பினிற்களிம்பு இயல்பாகவே அமைந்திருத்தல் போலவே, உயிர்களிடத்தும மும்மலங்கள் இயல்பாகவே அமைந்திருக்கும் செம்பினில் உள்ள களிம்பு போக வேண்டுமானால் புளி முதலானவற்றைப் போட்டு நன்றாகத் தேய்க்க வேண்டும். தேய்க்கத் தேய்க்கச் செம்பினில உள்ள களிம்பு நீங்கிச் சுத்தமாகவும ஒளியோடும் தோன்றும அதுபோலவே ஞானம பெருகப் பெருக உயிர்களைப் பற்றி நிற்கும மலங்களும் நீங்கி உயிர்கள் ஒளி பெற்றுத் திகழும ஒளி பெற்ற உயிர்கள் ஒளி வடிவான இறைவனைக் காணும் தகுதியும் அப்போது வந்து சேரும இதனால இறைவனைக் காண ஞானம தேவை என்பது புலப்படுகிறது

உலகப் பொருள்களைக் காண ஊனக் கண்கள் தேவை உலகங்களின தலைவனாகிய இறைவனைக்காண ஞானக் கண் தேவை என்பதையும் அறிகிறோம.

உயர்திணை, அஃறிணை ஆகியவற்றைக் கொண்ட உலகத்துக்குத் தலைவன் ஒருவன உளன் என்பதனையும், உலகில் காணப்படும் பொருள்கள் அனைத்தும படைத்தல், காத்தல், அழித்தல் எனப்படும் முத்தொழில்களைப் பெற்றிருக்கும் ஒருவனால ஆதிக்கம் செய்யப்படுகின்றன என்பதனையும், உயிர்களின் மலங்களை நீக்குதற் பொருட்டாகவே இறைவன் உயிர்களை அழித்தும படைத்தும் காத்தும வருகிறான் என்பதனையும, சங்காரம செய்யும காத்தாவே படைத்தற்கும் உரிய பரமபொருளாக இருக்கிறான என்பதனையும சான்றோர்கள் கூறி வருகின்றனர் என்பதனை அறிந்தோம

அவன்அவள் அதுஎனும அவைமூ
வினைமையில

தோற்றிய திதியே ஒடுங்கிமலத்
துளதாம

அந்தம ஆதி என்மனார் புலவர்

என்பது சிவஞான போத நூற்பா கூறும பதிப்பிரமாணமாகும

காட்டலாகாப் பொருளாக உள்ள கடவுள் எத்தகைய நிலையில் விளங்குகிறான்? இறைவனின் நிலையை இரண்டாகக் கூறுவர் சான்றோர். அவை சொரூப இலட்சணம், தடத்த இலட்சணம் எனப் பெயர் பெறும

சொரூப இலட்சணமாவது,

எதனையும நோக்காது தன்னையே நோக்கி நிற்கும சிறப்பு நிலை இதுவே இறைவனின உண்மை நிலை

தடத்த இலட்சணமாவது,

இறைவன உலகத்தை நோக்கி நிற்கும பொதுநிலை. சொரூப இலட்சணத்திலும், தடத்த இலட்சணத்திலும இறைவன வெவ்வேறு தன்மைகளை உடையவனாகக் காட்சியளிப்பான.

சொரூப நிலையில் இறைவன விளங்கும நிலையை அளவிட முடியாது. காணும பொருள்கள அனைத்திலும கலந்து நிற்பவனாய, ஒப்பற்ற ஒரே

மூர்த்தியாய, உருவம் ஏதுமின்றி, மனம மொழி மெய்களைக் கடநத வனாய வீறறிருப்பான

வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய்
இன்மையுமாய்க்
கோனாகி யானெனதென் றவரவரைக்
கூத்தாட்டு
வானாகி நின்றாயை என்சொல்லி
வாழ்த்துவனே

என்று மணிவாசகப பெருமான் இறைவனைப போற்றிப பாடும் இப பாடலில் இறைவனின் சொரூப நிலை விளக்கபபட்டுள்ளதைக காணலாம

சொரூப நிலையில இறைவன் உண்மை நிலையில விளங்குகிறான். தடத்த நிலையில இறைவன் இயங்கும நிலையில் இலங்குகிறான. இந நிலையில் இறைவன் சக்தி என்னும பெயரால் அழைககப்படுகிறான் இறைவன் உயிர்கள்பால கொள்ளும கருணையால சக்தியாக-ஆற்றலை வெளிபபடுத்துபவனாக நின்று அருள் புரிகிறான்.

சொரூப நிலையைச சிவம என்றால், தடத்த நிலையைச சக்தி எனலாம. சிவமும் சக்தியும வேறு வேறானவை அல்ல, ஒன்றே என்பது உணரத்தக்குரியது

இதனால் சிவம என்பது பரம பொருள் என்பதும, உலகில உள்ள எச்சமயத்தினரும் எப்பெயரால வழங்கிடினும் அது சிவ பரமபொருளையே குறிக்கும என்பதனையும அறிஞர் அறிவா எனவே, பரமபொருளே சிவமாகவும சக்தியாகவும இருநது உலகை ஆண்டு வருகிறார் என்பதனை உணர முடிகிறது

இரு நிலைகளாக இலங்கும் இறைவனுக்கு நமககுள்ள சத்துவம் (சாத்வீகம் அலலது அறிவு) இராசசம் (இராசதம அல்லது ஆட்சி) தாமதம (அழுந்தல்) எனப்படும முக்குணங்கள் இருப்பது போலவே, குணங்கள் ஏதேனும் உள்ளனவா? என்னும் கேள்வி எழுவது இயற்கை தானே! ஆயின, இறைவனுககு நமக்குள்ள இம்முககுணஙகள் இல்லை. அனந்த கோடி கல்யாண குணங்களை உடையவன ஆண்டவன ஆண்டவனுக்குள்ள குணஙகள் அளவற்றவை யெனினும அறிஞர் சிலர் ஆண்டவனுக்குள்ள முக்கிய குணங்களாகச சிலவற்றைக் குறிப்பர.

திருவள்ளுவர் இறைவனை எண் குணத்தான் எனக குறிப்பிட்டுச் சொல்லுவார்.

கோளில் பொறியில் குணமிலவே
எண் குணத்தான்
தாளை வணங்காத் தலை.

இறைவனின் எண் குணங்களாவன:

1. தன் வயத்தனாதல் (முழு முதற் கடவுளாக இருந்து அனைத்தையும் இயக்கும ஆற்றல் உடையவனாதல்)

2. இயற்கை உணர்வினன் ஆதல் (பிறர் அறிவிக்க அறியும் ஆற்றலின்றித் தானே அனைத்தையும் இயல்பாக அறியும ஆற்றல் உடையவனாதல)

3. முற்றுணர்வினன் ஆதல் (பேரறிவு உடையவனாய் முழுவதையும் உணர்தல் )

4 அளவிலா ஆற்றல் உடைமை. (ஆக்கல, அளித்தல, அழித்தல், அருளல், மறைத்தல் முதலான அனைத்துச் செயலகளையும எளிதாகச் செய்தல)

5. வரமபிலா இன்பம உடைமை (துன்பம கலவாத பேரின்பம உடையவனாதல)

6 பேரருள் உடைமை (கருணையே வடிவமாகி எல்லா உயிர்களையும காக்கும் கருணாமூர்த்தியாக விளங்குதல)

7 இயல்பாகவே பாசஙகளின் நீங்குதல். (பாசங்களிலிருந்தும் நீங்கி நிற்கும் பாங்கினனாதல்).

8. தூய வடிவினனாதல். (மலமற்ற தூயவனாக-அமலனாக விளஙகுதல்).

அறு குணத்தான் (பகவன்) என்றும இறைவனைச் சான்றோர் அழைப்பர். ஆறு குணங்களாவன·

ஐஸ்வர்யம், வீர்யம், புகழ, திரு, ஞானம், வைராக்யம் என்பன

குணமிலியாகிய இறைவனிடமும் சிறப்புக் குணங்கள் பல மிளிர்வதாகச் சான்றோர்கள் கூறுவர். இத்தகைய சிறப்புக் குணங்களையுடைய இறைவன் நம அறிவுக்குப புலப்படுவதில்லையே! ஏன்?

நமக்குள்ள அறிவு சிற்றறிவு. இறைவன் பேரறிவினன். எனவே சில காலமே வாழக்கூடிய சிற்றறிவுடைய நமக்கு என்றும உள்ளவனாகிய பேரறிவுடைய இறைவன் தோற்றமாவதில்லை.

நம் அறிவினால் சுட்டி அறியப்படும் பொருள்கள் அனைத்தும் அழிநது போகக் கூடியவை. நம் அறிவினால் அறியப்படாத பொருள்கள் எல்லாம உலகில் இலலாத பொய்யான பொருள்கள்.

அறியும் பொருளாகவும் இலலாமல், பொய்யான பொருளாகவும் இல்லாமல் என்றும் உள்ள மெய்ப் பொருளாக—சத்து சித்து ஆனந்தமாக உள்ள பொருளே இறைவன் என்று சான்றோர்கள தெளிந்து கூறியுள்ள உண்மையை மெய்கண்ட சிவாச்சாரியார் திருவாய் மலர்ந்தருளியுள்ளார்.

உணர்உரு அசத்துஎனின உணராது
இன்மையின்
இருதிறன அலலது சிவசத்து ஆம்என
இரண்டு வகையின இசைக்குமன்
உலகே.

(ஆறாஞ்சூததிரம்-சிவஞானபோதம).

பேரறிவுடைய இறைவனை நம்மால் அறிய முடியவில்லையாயினும்,ஞானத்தால் உணர்தல் முடியும். இவவாறு உணர்தல் யாங்ஙனம்?

1. இறைவனைப பற்றி உணர வேண்டுமானால, இறைவனே நமககு அருள்புரிதல் வேண்டும். இதனையே, "அவனருளாலே அவன தாள் வணஙகி", என பாா மாணிகக வாசகர்

2. இறைவனின் அருள பெறற சிவனடியாாகள், ஆழவாாகள வர லாறுகளைக கறறும கேடடும அறி தல மூலம உணர முடியும

3 இறைவனின் அருள் பெறற மெயயடியாாகள் கூறும உபதேச வாககாலும உணர முடியும.

அரச குலததில் பிறநத குழந்தை வேடர்களால் கவரபபடடு வளாநது வருங்காலை, வேட்டைககுச சென்ற அரசன் தன் மகனைக கண்டு தன மகன் எனபதறகான அடையாளஙகூறி வேடர் கூட்டததிலிருந்தும மீடடு வந்து தன் நாட்டுக்கு அழைத்து வந்து முடி சூடடுதல் போல, ஐம்புலனகளாகிய வேடர் களிடம அகபபடடு உணமையுணராது உழனறு கொணடிருககையில் இறைவன திருவருளே குருவாக வநது உண்மையை உணாதத உயிரானது உணமையை உணாநது இறைவனிடமே சென்று அடையும அப் போதுதான அநத உயிாதான இறைவனின குமாரன எனபதைத தெளி வாக அறிநது இனபுறுகிறது

ஐமபுல வேடரின அயாந்தனை வளர்ந்
தெனத்
தமமுதல குருவுமாயத தவத்தினில
உணர்த்தவிடடு
அனனியம இனமையின அரனகழல
செலுமே
(எடடாம சூததிரம-சிவஞான
போதம.)

பரமபொருள ஒருவனே. அவனை எவவுருவிலும எபபெயராலும் வழி படடாலும பயன ஒன்றே. இறைவனிடமும பேதம கறபிபபவா மூடர் அவரவா அறிவுத் திறனுககும சூழநிலைக்கும ஏறப இறைவனின் உருவஙகளும பெயாகளும பலவேறு வகைபபடுகினறன. இதனாலேயே பலராக உளளான என்று கூறுதற் கில்லை. பரமபொருள் ஒன்றே என னும ஞானம பெறறு, பரமபொருளை அடையும வழியைச சிவஞான போதம் அறபுதமாக எடுத்துக் காடடுகிறது

இறைவன திருவடியைச சேரவொடடாமல உயிர்களுககுத தடையாக இருபபது ஆணவம, கனமம, மாயை எனபபடும மும்மலஙகளே யாகும எனவே முதலில மல அழுககைப போககல் வேணடும பினனா மெயயடியாரோடு கூடி மகிழ வேண்டும அதன் பினனர் அடியாரது திருவேடததையும, திருககோயில்களையும பரமபொருளாகவே கருதி வழிபாடு செயய வேணடும. இவவாறு செயது வருவாா கணகளுககு இறைவன இருக்கிறான் என்னும உணமை தானே புலபபடும. இததகை யோரே பதியுண்மையை யுணாநத ஞானியாராவா

செமமலர் நோனதாள் சேரலொட்டா
அமமலம் கழீஇ அனபரொடு மரீஇ
மாலற நேயம மலிந்தவர் வேடமும
ஆலயம தானும அரனெனத்
தொழுமே.
(பன்னிரண்டாம சூத்திரம—சிவ
ஞான போதம்).

★



# உறவும் உய்வும்

முன்னுரை

பரம்பொருளான ஸ்ரீமந் நாராயணன உயிா பொருளகளையும, உயிா அறற அசேதனப பொருள்களையும சரீரமாக உடையவன். அவறறை அனுபரவேசித்திருபபவன் அவன் பெருமையில் உயர்வு அற உயர்ந் திருபபவன. நாம சிறுமையில மிக்கு தாழ்வின எல்லையில் அறத் தாழ்ந்திருபபவர். நமககுறறது எம பெருமானை ஏததி வழிபடுதல். இது நமது ஸவருபத்திறகுரியது. அவன்திறத்து நாம ஆறறும வழிபாடுகள பலதிறபபடுவன. இவ் வழிபாடுகளின வகை, முறைகளைச் சாத்திரஙகள பரக்கக் கூறுகினறன இறைவனே அவாபத ஸமஸத காமன் அதாவது வேண்டுதல் வேண்டாமையிலான் அவனுககு நம் முடைய பூசனை வழிபாடுகளால் கிடைக்கும் பயன்தான் என்ன? ஒன்றுமிலலை. ஆனல் நாம் வழிபடுவது நம்முடைய ஸ்வரூபம் நிறம் பெறுவதற்காகவேயாம். இறைவனே அவ்ப ஸந்துஷ்டன. ஆராதனைக் கெளியன். நாமோ அநாதி காலமாக இறைவனேடு எதிர்வாதம் புரிந்து எதிரமபு கோத்து நிற்கும் கொடிய ஸமஸாரிகள். இந்நிலையினின்றும நாம் நீங்கி அவனேடு நமக்குள் ஒழிக்க ஒழியாத உறவினை தெரிந்துகொண்டு, உணர்ந்து உணர்ந்து உறைப்பு மிக ஏற்றுக் கொள்ளுதலே சாலச் சிறந்த இறை வழிபாடாம. ''உன் தன்னேடு உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது'' என்றன்றே நாச்சியாரும் அருளிச செயதது இந்த உறவினை அறிவதே அறவுயர்ந்த நன்மையாம். இவ்வுறவு உணர்சசி நமகசு உண்டானல் நாம் இறைவனேடு விவாதப் படமாட்டோம். இவ்வெதிர்வாதம் தொலைந்ததாகில் எல்லாவித பணிவிடைகளையும் இறைவனுக்கு ஆற்றியவராவோம் மனுஸ்ம்ருதியில்,

> यमो वैवस्वतो राजा यस्तवैष हृदि स्थितः ।
> तेन चेदविवादस्ते मा गङ्गान् मा कुरून्गमः ॥

என்று கூறப்பட்டுள்ளது இதன் பொருள் எல்லாவற்றையும் நியமிப்பவனும், தண்டதரனும் ஆதித்ய மண்டல வாசியும், அனைவர்க்கும் இனியனும் ஆக இருக்கினற இறைவன் உனது உள்ளத்தின் உளனே உளன் அவனேடு உனக்கு விவாதம் நெடு நாளாக தொடர்ந்து வருகிறது அதாவது அவன் இந்த ஆத்ம வஸ்துவை தன்னுடைய உரிமைப் பொருளாக அபிமானத்தால அதறகு இசையாமல இது எனனுடையது, எனககே உரியது என்று செருககுமிககிருப்பதுதான விவா

---

கொடடையூா தமபுப கிருஷ்ணசாமி.

---

தம் இது அழிநது ஒழியுமானல் கங்கையாடலும் வேண்டா குரு க்ஷேத்திரம் செல்லவும் வேண்டா. க்ஷேததிர தீர்ததயாத்திரைகளை மேற்கொள்ள வேண்டா என்கிறது.

அகங்கார, மமகாரங்களாகிய தீம்புகளை உள்ளே வைத்துக்கொண்டு அவற்றை விடாதே பிராயச்சித்தம் பண்ணுகை வீணேயாம். அசுத்தமான வஸ்துவை உள்ளே வைத்துக்கொள்கலத்தைப் பளபளப்பாக சுத்தம் செய்வது போன்றதே இவ்வடு செயல் உள்ளே இறைவனோடு மாறுபட்டு வெளியே அவனுடைய முகமலர்ச்சிக்காக க்ஷேத்திர தீர்த்த யாத்திரைகளைச் செய்தல் சிறப்பிற்குரியதன்று. "உள்ளுவார் உள்ளிற்றெல்லாம் உடனிருந்து அறியும் இறைவனை" அகத்தே வெறுத்துப் பகைத்து புறத்தே வெட்கமின்றி வஞ்சனை வேடம் பூண்டு புண்ணியத்தலம் செல்வதும் புனல் நீர் ஆடுவதும் என் பயன் கருதி அவன் உன்னை தன்னவன் என்பானாகில ஓம்மறைந்து எதிர்வாதம் புரியாது உள்ளம் உவப்ப நீர் ஏற்பீராயின் இதுவே அவனுடைய முகமலர்த்திக்கு நீர் செய்யும் வழிபாடாம். நீர் சிறந்துய்ய இஃதே உபாயம். ஆகவே எதிர்வாதம் தொலைந்து இசைவு கூடலே வேண்டுவது. இதையே கூரத்தாழ்வானும் வரதராஜஸ்தவத்தில்,

त्वद्दास्यमस्य हि स्वरसप्रसक्तं
तच्चोरयन्नयमहं किल चस्खल प्राक् ।
त्वम्मामकीन इति मामभिमन्यसे स्म
हस्तीश सम्प्रति नस्तमिमं विवादम् ॥

என்று கூறுகிறார்

"அத்திகிரி அருளாளா! இத்தகைய மகாபாபியான எனக்கு உன்பால் அடிமைப்பட்டிருப்பதன்றோ இனிமையாய் இருப்பது. பண்டு பண்டாக இந்த இனிய தாஸ்யத்தை களவு கொண்டு நழுவிப் போந்தேன். இப்படிப்பட்ட இழிந்த என்னை என்னுடையவன் என்று அபிமானித்தருளினாய். உனக்கும் நமக்கும் உண்டான "நான் உன் தாஸனல்லேன்" என்பதும் நீ என்னை நீ என்னுடைய தாஸனதான" என்று என்னைப் பின் தொடர்வதுமான இந்த விதண்டா வாதத்தை நீ எப்பொது அடியோடு என்னிடமிருந்து களைந்து அழிக்கப் போகிறாய்" என்று சம்பந்த உணர்ச்சி தடைபடாமல் இருத்தலையும் மறுக்காது ஒழிதலையும் வேண்டினார். இந்த உறவு உறைப்பு! உறைப்பு! இந்த எதிர் வாதம் தன்னடையே நசித்து ஒழியும் "உன்னை யன்றி இலேன் கண்டாய் நாரணனே, நீ என்னை அன்றி இலை" என்றார் திருமழிசைப்பிரான். இறைவனுக்கும், ஜீவனுக்கும் உள்ள சம்பந்தம் அனாதி. இறைவனாலும் மறுக்கப் போகாது இன்பம் மிக்கது. அவன் ஸ்வாமி நாம் சொத்து. (ஸ்வம்) என்பதே இவ்வுறவு. இந்த ஞானம் ஏற்பட்ட அளவிலேயே நாம் வாட்சி பெற்றவராவோம். இதனை விளக்க ஈடுவியாக்யானத்தில் ஓர் ஐதீஹ்யம் கூறப்பட்டுள்ளது காண்போம்.

ஒரு நகரத்தில் ஒரு வணிகர் தலைவன் இருந்தான். அவன் திரை கடலோடி திரவியம் தேடி ஈட்ட எண்ணமிட்டான். அவ்வாறு அவன் புறப்பட இருக்கும் தருணம் அவன் மனைவி வயிறு வாய்த்திருந்தாள் அவன் புறப்பட்டு த்வீபாந்தரம் சென்று சேர்ந்து வியாபாரத்தில் கண்ணாய் இருந்தனன். கணவன் சென்ற இந்நாட்களில் மனைவியும் கரு உயிர்த்தாள். அம்மகன் நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாக வளர்பிறை மதியே ஒப்ப வளர்ந்து வருவானாயினன் வெகு தூர நாடுகளில் வாணிபம் செய்து வாழ்ந்து கொண்டிருந்த அவ்வணிகன் மகப்பேறுண்டான செய்தியை அறிந்தான் பெரு மகிழ்ச்சி கொண்டான். விரைவிலேயே ஊர் திரும்ப முயற்சித்தனன் ஆயினும் மேன்மேலும் லாபகரமாய் இருந்த வாணிபத்தை விட முடியாதவனாக நெடுங்காலம் அங்கேயே தங்கி விட்டான். மகனும் உரிய வயது வந்த வளவில் தனது குலத்தொழிலாகிய வாணிபத்தைக் கைப்பற்றி செய்யலானான் வயது முதிர்ந்த அளவிலும் இவனுடைய தகப்பன் தூர தேசத்தில வாழ்கிறான் பின் பொரு நாள் அவ்வணிகனது மகன் தொழில முறையில் வெளிநாடு சென்றிருந்து சரக்குகளுடன் கடல வழியே ஊர்த் துறைமுகம் வந்து சேர்ந்தான். அவன் வந்த கப்பலிலேயே தந்தையும் சரக்குகள் பிடித்துக் கொண்டு ஊர் வந்து சேர்ந்தான அந்தக் கப்பல் துறைமுகம் சேர்ந்தவுடன் மகன் தனது மூட்டைகளை ஓர் சத்திரத்தில் இறக்கினான் தகப்பனும் அதே சத்திரத்தை குறிக்கொண்டு தன் மூட்டைகளையும் இறக்கினான் இவ்விருவரும் தங்களுக்குள் தந்தை தனயன் என்ற உறவினை அறியார். இவர்களுக்கு இவ்வுறவினை அறிய சந்தர்ப்பமும் இல்லை. இவன் பிறக்கு முன்னமே அன்றோ அவன் வெளி நாடு சென்றது ஆதலின இவனை வெளி நாட்டு வாத்தகனாகவே மகன் எண்ணினான். தந்தையும் மகனை அவ்வாறே பாவித்தான். இறக்குமதி இடத்தைப்பற்றி இவர்களுக்குள் விவாதம் முற்றி விட்டது. இவ்விடத்தை நானே முதலில் பேசினேன், எனக்குத்தான் இவ்விடம் உரியது என்று மகன் விவாதித்தான். அங்ஙனமே தந்தையும் வாதித்தான். இந்த வாக்கு வாதம் சண்டையில் முற்றி உயிர் போக்கும் அளவிற்கு முற்றிவிட்டது. அவ்வமயம் இவ்விருவருடைய உறவு முறையை உணர்ந்திருந்த ஒரு முது கிழவன் கண்டு "அந்தோ, உறவு அறியாமல் இது என்ன விவாதம். இவன் உன் தந்தை, நீ அவனது மகன் ஆகியிருக்க எதற்கு இங்ஙனே வீண் விவாதப்படுகிறீர்?" என்று கூறினான். அதன் பிறகு என்ன நடந்திருக்க வேண்டும் என்பதை உணர்வீராக! சம்பந்த உணர்ச்சி உண்டான உடன் கடந்த நாளைக்கு சோகித்து இருவர் சரக்கும் ஒரு சரக்காய தந்தை இரட்சகனாய் மகன் இரட்சியனாய் விவாதம் தொலைந்து இன்பரசம் ஏற்பட்டது

என்பது கூறவும் வேண்டுமோ? அது போல அகிலலோக பிதாவான ஸ்ரீமந் நாராயணனுக்கும், நமக்கும் உள்ள ஒழிக்க ஒழியாத உறுதியான உறவினை நன்குணர்ந்து அவன த்வம் மே (நீ எனக்குரியன்) என்றால் அஹம்மே (நான் எனக்கே உரியன்) என்று விவாதபபடாமல் இசைந்தானாகில் "பொன்னுலகாளீரோ புவன முழுதாளீரோ" எனறு மண்ணும் விண்ணுமாகிய உபய விபூதியையும் நாமிட்ட வழக்காய தாராளமாக அனுபவிக்கலாமல்லவா? தந்தை சொத்துக்கள தனயனுக்கு மாகுமன்றோ?

மற்றொரு இதிஹாஸம் காண்மின். ஒரு அரசகுமாரன நெடுந்தூரம் ஒரு நாள் செல்ல நேர்ந்தது. ஆங்கே அழகிய தோட்டமொன்றைக் கண்டான் அது கட்டுக் காவலும் கொண்டிருந்தது தன் சோர்வை நீக்கிக் கொளளவும், தோட்ட அழகினை உட்புகுந்து உலாவிக் கண்டு களிக்கவும் விருப்பப்பட்டான். இருப்பினும் காவலுக்கஞ்சித் தயங்கினான். அப்பொழுது அவவழி கடந்து செல்லும் ஒரு பெரியார் "குழந்தாய் இஃது உனது தந்தையாரது உத்யானவனம், ஏன தயங்குகிறாய்!" எனறு கூற உறவினைப புரிந்து கொண்ட காவலாளி வணங்கி உளளே அழைகக உறவறிந்த இவனும் உரிமையுடன உளளே செனறு புகளுதகித்தான் இதுபோல தநதையின உடைமை இவை எனற நினைவே வேண்டுவது. தந்தையின உடைமையே இவை என்றுணர்ந்து நீயும் அவவுடமையில ஒன்றாக சேர்ந்துயயலாமே. இக்கருத்தையே நம்மாழவார் "ஈசன் அடங்கு எழில் அஃதெனறு அடங்குக உளளே" எனகிறார். (எழில் = செல்வம்) ஆக நாம் இறைவனுக்கும் நமக்கும் உள்ள உறவுகள் ஒன்றல்ல ஒன்பது இவை பெரிய திருமந்திரம எனபபடும் அஷ்டாக்ஷர மஹா மந்திரத்திலிருந்து பெறப்படுகிறது. பூர்வாசார்யர்கள இம்மந்திரத்தைக் கூறும்பொழுது "எட்டிழையாய் மூன்று சரடாய் இருப்பதொரு மங்கல ஸூத்ரம் போலே" என்று அருளிச செய்வர். நாம் உலகில் ஒரு கன்னிப் பெண் கழுத்தில் (தாலி) மங்கல ஸூத்தம் ஏறியவாறே, அந்த தம்பதிகளிடையே (பர்த்ரு பார்யா ஸம்பந்தம்) கணவன் மனைவி என்ற ஒருறவு ஏற்படுகிறது. திருமந்திரமாகிய மங்கல ஸூத்ரம் நம் கழுத்தில் ஏறியவாறே ஒருறவுமட்டன்று ஒன்பது உறவுகள் தேறுகின்றன. எங்ஙனே என்னில் திருவஷ்டாக்ஷர மநதிரததில் முதல் பதம் ப்ரணவம். இது 'அ' என்றும் 'உ' என்றும், 'ம' என்றும் மூன்று அக்ஷரங்கள் கூடிய ஓரெழுத்தொரு மொழி இதில் உள்ள மூன்று எழுத்துக்களுமே ஓரெழுத்தொரு மொழியாம் ஒவ்வொரு எழுத்தும் ஒரு தனிச்சொல். முதலில் 'அ' என்ற சொலலை எடுத்துக் கொள்வோம் இதில் நமக்குத் தேறும் உறவு மூன்று. அவையாவன. பிதா புத்ர ஸம்பந்தம், ரக்ஷ்ய ரக்ஷக ஸம்பந்தம், சேஷ சேஷித்வ ஸம்பந்தம் எனபன அவை

**பிதாபுத்ர ஸம்பந்தம்:**

ஒரு சொல்லுக்கு ப்ரக்ருதி சக்தி என்றும், தாது சக்தி என்றும் இரு வழிப பொருள் கோடல் மரபு அகாரத்தின் பரக்ருதி சக்தி வழிப் பொருள் காண்போம் "அகாரோவை ஸர்வா வாக" எனறு அகரத்தை மொழிக்கெல்லாம் முதலாகச சாத்திரம் கூறிற்று. திருவள்ளுவர் "அகர முதல எழுதததெல்லாம்" என்றார் " 'அ இதி நாராயணஸ்ய பிரதமாபிதானம்' 'அ' எனபது ஸ்ரீமந் நாராயணனின் முதற் பெயர் என பர். மொழிக்கெல்லாம் காரணமான அகரம் போலே, அகாரத்தால் அறியப்படும் நாராயணனே உலகுக்குக் காரணம் அகரத்திலிருந்து எழுத்துக்களும் சொற்களும் எவவாறு தோன்றுகினறனவோ அது போன்று அகார வாச்யனான நாராயணனிடமிருந்து உயிர்களும் பிறவுமாகிய உலகு தோன்றுகிறது. 'ஆதிபகவன் முதற்றே உலகு' என்பதும் இதனையே கூறும். இதிலிருந்து அவன் காரணம் உலகு காரியம் அவன் ஜனகன் (உண்டாக்கியவன்) இவை ஜன்யம் (உண்டாக்கியவை) அதாவது காரிய காரண பாவம் அல்லது ஜனக ஜன்ய பாவம் அல்லது பிதாபுத்ர பாவம் தேறுகினறது.

**ரக்ஷ்ய ரக்ஷக ஸம்பந்தம்:**

'அவ - ரக்ஷணே' என்பது தாது (பகுதி) இப்பகுதியடியாகப் பிறக்கும் 'அ' என்ற பதத்திற்குத் தேறும் பொருள அவன் ஸர்வ ரக்ஷகன் என்பது. இஃது பிதாபுத்ர ஸம்பந்தாலேயே பெறக்கூடும் என்றாலும் தனியே தாது சக்தியடியாக பெறல் சிறப்பு. 'येन जातानि जीवन्ति' என்ற பிரமாணமும் இதை வலியுறுத்தும் மூவாத் தனிமுதலாய மூவுலகும் காவலோன். காரணன ஆனவாறே காவலனாகையும் ஸித்தம்.

**சேஷ சேஷி சம்பந்தம்:**

இந்த அகரததின் மேல் நானகாம் வேற்றுமை உருபு ஏறிக்கழியும் என்பர். வேத இலக்கண நூல் வல்லார். இஃதின்றேல் பொருளமைதி தேறுவது அரிது அகரத்துடன ஆய என்ற வேறறுமை உருபு புணர்ந்து கெட்டு மீண்டும் அ என்றே நிற்கும். இதன பொருள் ஜீவன அகரத்தின் பொருட்டே என்று தேறும் இவ்வுருபு மகரமாகிய ஜீவன அகரமாகிய இறைவனுக்காகவே என்றும், அவனுககே அடிமைப் பட்டது அதாவது சேஷப்பட்டது எனறும் பொருள்படும். ஆக இங்கு சேஷ சேஷி பாவம் ஆகிய உறவு தேறுகிறது

**பர்த்ருபார்யா சம்பந்தம்:**

உகாரம் தேற்றப் பொருள் உடையது. (அவதாரணார்த்தம்) மகரமாகிய ஜீவன் எம்பெருமானுக்குரியன் என்ற

முந்திய உறவை மேலும் நெருக்கி அவனுக்கே உரியன் என்ற அநன் யார்கரசேஷத்வத்தைககாட்டுகிறது. 'கண்டார் இகழவனவே காதலன் தான் செயதிடினும் கொண்டானை யல்லால் அறியாக் குலமகள் போல' என்றபடி கணவனுககே அற்றுத் தீர்ந்த குலமகள் போல இவவாத்மா இறைவனுக்கே அற்றுத் தீர்ந்தது என தேறுவதால ஈணடு பர்த்ரு, பார்யா சமபந்தம் (கணவன, மனைவி) சுட்டபபடுகிறது.

**ஞாத்ருஞேயவுறவு:**

மகாரம் 25-ம் அக்ஷரமாய ஞான வாசியாய் இருபபதாலே ஆத்மாவைச் சொல்கிறது. 'மன - ஞானே' மன- அவபோதனே' என்ற தாதுப பொருள்களடியாக, பகுதிப பொருள் களடியாக இவன் அறிபவன் என்றும், இறைவன் அறியபபடுவன் என்றும் விளங்குகிறது 'ஒண்டா மரையாள் கேள்வன் ஒருவனையே நோக்கும் உணர்வு' உணர்வு என பது ஞானம் இநத அறிவு ஒண்டா மரையாள் கேள்வனை அறிவதிலேயே நோக்குடைத்து எனகிறார் ஆழ்வார், இத்தால் தேறிய உறவு ஞாத்ருஞேய பாவம். (அறிபவன்-அறியப்படுவன்) ஆக 'ஓம்' எனகிற பிரணவத்தில தேறிய உறவுகள் ஐந்து. அவை 1. பிதாபுதர உறவு, 2. ரக்ஷ்ய ரக்ஷக உறவு, 3. சேஷ சேஷியுறவு, 4 பர்த்ரு பார்யையுறவு, 5. ஞாதரு ஞேயவுறவு என்பனவாம

**ஸ்வ ஸ்வாமி சம்பந்தம்:**

மேலே நம என்ற பததில் தேறும் உறவினைக் காண்போம் 'ம.' என்பதால் தனக்குரியன் எனகிறது 'ந' என்ற அத்தைத் தவிர்க்கிறது. ஆக எம்பெருமானுக்கே உரியனான நான் எனக்கு உரியன் அல்லேன் என்கிறது. எம்பெருமான் ஸ்வாமி என்றும், எம்பெருமான் ஒழிந்த மற்றவை சொம் (சொத்து) என்றும் தேறும். சொத்து தன்னைத் தானே காத்துக் கொள்ளாது. அது தன காவலுக்கு எஜமானனையே நோக்குவது போல இநத ஜீவாத்மாவும தன்னுடைய இரடசணத்திறகு எம்பெருமானையே எதிரபாாததிருப்பன. பிராட்டியும் திருவடியிடம் 'தத்தஸ்ய ஸத்ருஸம்ப வேத' எனறுள் அன்றோ? ஆக நம. பதத்திலுல் அவன் ஸ்வாமி என்றும் இவன் சொத்து எனகிற 'ஸவ ஸ்வாமி'பாவம்தேறுகிறது.'ஸ்வத்வம் ஆத்மநி ஸஞ்சாதம ஸவாமிதவம் பிரும்ஹணிஸதிதம்' என்ற ப்ரமாண ஸலோகமும் காண்க. இக்கருத்தையே ஞானசார பாசுரம் நினைவுபடுத்தும்.

> உடைமை நான் என்றும் உடையான்
> உயிரை
> வடமதுரை வந்துதித் தானென்றும்—
> திடமாக
> அறிந்தவன் தன் தாளில் அடைந்த
> வறகும் உண்டோ
> பிறந்துபடும் நீள்துயரம பின்.
> (ஞான சாரம-22)

**ஆதார ஆதேய சம்பந்தம்:**

இனி நாராயணாய என்ற மூனறுவது பதத்தை நோக்குவோம். உலகும் உலகில் உள்ள உயிர், உயிரற்ற பொருள்கள் யாவும நாரங்கள் எனபபடும. இந்த நாரங்களைத் தாங்கித் தன்னிடத்தே கொண்டவன எனறு பொருளாகும பொழுது தத்புருஷ சமாஸ வயுத்பததியால் நாரஙகளுக்கு அயனமாக ஆசரயமாக இருப்பவன எனபது தேறுகிறது. இதனுல் அவன் தார்யன். இவை தாரகம் அவன் நாரங்களுக்கு ஆதாரமாய் அவற்றைத் தாங்கியிருக்கிறான். அவன் ஆதாரம் நாரங்கள் ஆதேயம் எனற பொருள் கிடைப்பதால் ஆதார ஆதேய பாவம் கிடைக்கிறது

**சரீர சரீரி பாவம்:**

இனி சகல வஸதுக்களையும் தனக்கு ஆதாரமாகக் கொண்டு அவைகளை அனுப்பிரவேசித்து இருப்பவன் என்பது பஹுவ்ரீஹி சமாஸ வித்பத்தி ஸித்தம் நாரங்களில பகவான் உள்ளான் 'உமமுயிர் வீடுடையான்' என்பர் நம்மாழ்வார். ஜீவனை வீடாக உடையவன, ஆத்மாவை சரீரமாய்க் கொண்டு அந்தராத்மாவாய் இருக்கிறான். இப்படி அவன் உயிர்க்கு உயிராய் இருக்கும் தன்மையினுல் சரீர ஆத்ம பாவம் தேறுகிறது இதனை சரீர சரீரி சமபநதம் எனபர்.

**போக்த்ருபோக்ய ஸம்பந்தம்:**

இனி நாராயண பதத்தில் உள்ள ஆய என்ற நான்காம் வேறறுமையுடன் நம என்ற பதத்தையும் கொண்டு கூட்டி பொருள் கொளவா. நாராயணனுக்குச் செயயபபடும கைங்கர்யத்தின் போகமும், இறைவனுககேயன்றி இநத ஜீவனுக்கு இல்லை. எமபெருமான் போக்தா அவனுக்கு இந்த ஜீவன் உணவு (போகயம் போகப பொருள்)நுகர்வான் அவன், நுகரபபடும் பொருள இந்த ஜீவன் இதனுல் போக்த்ரு, போக்ய பாவம் ஸித்திக்கிறது. ஆக இந்த 9 ஸம்பநதங்களையும் ஒருவன் நினைக்க அவன் பெருவாழவு பெற்று பேரின்ப நிலை அடைகிறுன். இக்கருத்தையே,

> பிதா ச ரக்ஷக சேஷீ
> பர்த்தா ஞேயோ ரமாபதி:।
> ஸ்வாம்யாதாரோ மமாதமா ச
> போக்தா சாத்யம அனுாதித:।

என்ற பூர்வர்கள அருளிய இந்த ஸலோகம் அடைவாக அறிவிக்கிறது





திருச்சானூர்

ஸ்ரீ பத்மாவதித்தாயார் கோயில்

## வருடாந்திர பிரம்மோற்சவம்

**19-11-84 முதல் 27-11-84 வரை**

**23-11-84 கஜவாகனம்: 24-11-84 கருடசேவை:**

**26-11-84 திருத் தேர்: 27-11-84 பஞ்சமி தீர்த்தம்:**

**பத்மாவதித் தாயார் கோயில்:**

மாதஸ் ஸமஸ்த ஜகதாம்
மதுகைட பாரேர்
வக்ஷோ விஹாரிணி
மநோஹர திவ்ய மூர்த்தே !
ஸ்ரீ ஸ்வாமிநி ச்ரிதஜன
ப்ரியதாந சீலே
ஸ்ரீ வேங்கடேச தயிதே
தவ ஸுப்ரபாதம் ||

"அனைத்துலகுகளின் அன்னையே, மதுகைடபர்களை அழித்த மகா விஷ்ணுவின் திருமார்பினில் விளையாடுபவளே, மனத்தைக் கவரும் அழகிய திருவுரு உடையவளே, செல்வத்தின் தலைவியே, அண்டியவர்கள் விரும்புவனவற்றை எல்லாம் வழங்குவதை இயல்பாகக் கொண்டவளே, திருவேங்கடவனின் அன்பிற்குரியவளே, உனக்குக் காலை பொழுது நல்லபடியாகப் புலருக."

**புராணம்:**

பிருகு முனிவர் திருமால் திருமார்பினில் தமது காலால் உதைத்த போது, அச்செய்கையைக் கடிந்து கொள்ளாது வாளாவிருந்து மகிழ்ச்சியுடன் அதைத் தனது நாயகர் ஏற்றுக் கொண்டதனால் கோபமுற்ற மகாலட்சுமி அவரைப் பிரிந்து, வைகுந்தத்திலிருந்து பூவிலகிறங்கி வந்துவிட்டாள், 'கோல்ஹாபூர்' எனப்படும் கொல்லாபுரத்தில் தனியே இருந்து வரலானாள்.

செல்வ மங்கையின் பிரிவினால் வாடிய திருமால வைகுந்தத்தில் தனியே இருக்கப் பிடிக்காமல் அங்கிருந்து இழிந்து, அலைமகளைத் தேடி நிலவுலகில் திரியும் போது கொல்லாபுரம் அடைந்தார். அங்குப் பத்து ஆண்டுகள் திருமகளைக் குறித்துத் தவமியற்றினார். அப்போது வான் குரல் ஒன்று, அங்கிருந்து தென திசையில சென்று ஸ்வர்ணமுகி என்னும் ஆற்றின் கரையினில் கடப்பாரையினால் குளம் வெட்டி, அதில தாமரை வளர்த்துத் தொடர்ந்து தவம் புரியுமாறு ஒலித்தது.

மகாவிஷ்ணுவும் அதன்படி, கருடன் மீதேறி, திருமலையின்மீது வராகப் பெருமான் கோயில் கொண்டிருக்கும் இடத்தின் அருகே இறங்கி, கருடனைக் குதிரையாக மாற்றிக் கொண்டு, அப்புரவி மேல் அமர்ந்து, திருவேங்கடமலையின் அடிவாரத்திலிருந்து கிளம்பி, சுமார் மூன்று கல் தொலைவில் தென் கிழக்கில் பொன் முகலி ஆற்றின் வடகரையில் அமைந்த திருச்சுகனூரில் தங்கி, அங்கு தன் கைகளினாலேயே கடப்பாரையின் துணையுடன் திருக்குளம் ஒன்றை வெட்டி, அதில் தாமரை மலர்கள வளர்வதற்கு உதவியாக அக்குளத்தின் கிழக்குக் கரையில் சூரிய நாராயண மூர்த்தியை மேற்கு முகமாக அமைத்து, நாள் ஒன்றுக்கு மூவாயிரம் எண்ணிக்கை வீதம் வழிபட்டு பன்னிரண்டு ஆண்டுகள் தவம் புரிந்தார்.

தன் கணவர் தன்னையே நினைந்து அன்புடன் புரிந்து வந்த தவத்தினால் அகம் குளிர்ந்த திருமகள் அவர்பால்

# திருச்சானூர்க் கோயில்கள்

(சிறுத்தானூர், திருச்சானூர், அலர்மேல் மங்காபுரம், திருச்சுகனூர், திருச்சோகனூர் என்றெல்லாம் அழைக்கப் பெற்றுவரும் ஊரில கோயில் கொண்டிருக்கும் பத்மாவதித் தாயாரைத் தரிசனம் செய்யாவிடில், திருமலை யாத்திரை முழு நிறைவு பெறாது என்பது திருப்பதி செல்லும் பக்தர்களின் ஆழ்ந்த நம்பிக்கை. 'அகலகில்லேன் இறையும்' என்றலர்மேல் மங்கை யுறை மார்பா - என்றுதானே திருவேங்கடத்தானும் ஏற்றம் பெறுகின்றான்!

அவ்வூரில் உள்ள கோயில்கள பற்றிய செய்திகளும், புராணமும் வரலாறும் பின்னிப்பிணைந்தவை, காலப் போக்கிலே திருவதியும ஆலயங்களில ஏற்பட்ட ஏற்றத் தாழ்வுகளுக்குச் சான்று பகர்வன, இறையடியார்களும் வரலாற்றில் ஈடுபாடு கொண்டவர்களும் தெரிந்து கொள்ள வேண்டியவை, சுவையானவையும் கூட.)

திரு ஏ. நடராஜன்—திருப்பதி.

மனமிரங்கினாள். மறைந்திருந்த அவள் மன மகிழ்ந்து, கார்த்திகைத் திங்கள் சுக்கில பட்சம் பஞ்சமி நாள் வெள்ளிக்கிழமை உத்தராடம் நட்சத்திரம் மைத்திர முகூர்த்தத்தில், தடாகத்தில் பூத்து நின்ற தாமரை மலர்களுள் ஒன்றன்மீது 'அலர் மேல் மலர்ந்த மங்கை'யாகத் தோன்றி, காந்தனை மகிழ்வித்தாள். தேவர்கள் அனைவரும அக்காட்சியினைக் கண் குளிரக் கண்டு மகிழ்ந்தனர். பின்னர் பிரம்மா, பரமேசுவரர், தேவேந்திரன் முதலிய தேவர்களும் முனி புங்கவர்களும் 'பதும ஸாரக் கோனேரி' என்றழைக்கப் பெற்ற அத்திருக்குளத்தில் நீராடித் தத்தம் இடங்களுக்குச் சென்றனர். இந்நிகழ்ச்சியினைக் குறிக்கும் வகையிலேயே இங்கு பத்மாவதி அம்மனுக்குக் கோயில் எழுந்தது என்பது ஐதிகம். தொண்டமான் சக்ரவர்த்தி இங்கு ஆலயம் அமைத்ததாகவும் கூறப்படுகிறது.

**வரலாறு:**

ஆனால் திருமலை, திருப்பதி, திருச்சானூர்க் கோயில்களில் காணப்



அன்ன வாகனம்



கஜ வாகனம்

படும் ஆயிரத்திற்கும் மேற்பட்ட கல்வெட்டுக்களில் இக்கோவில் பற்றிய குறிப்பு எதுவும் தென்படவில்லை! "அலர்மேல் மங்கை"யைக் குறிப்பிடும் ஒரு சில கல்வெட்டுக்களும்கூட, திருமலைத் திருவேங்கடவனின் திருமார்பினில் இடம் பெற்றிருக்கும் அலர்மேல் மங்கையையே குறிப்பதாகக் கொள்ள வேண்டியிருக்கிறது. எனவே, இக்கோயிலின் தொன்மை குறித்து ஐயப்பாடு எழுவதில் வியப்பேதுமில்லை.

"அலர்மேல் மங்கை நாச்சியார் சந்நிதி" என்பது பற்றிய குறிப்பு முதன்முதலாகத் தெரிய வருவது கி. பி. 1471-இல் தான். கி. பி. பதினைந்தாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் இக்கோயில் கட்டப்பட்டிருக்கலாம் என்று ஊகிப்பதில் தவறு எதுவும் இல்லை.

எனினும், கி. பி. பதினெட்டாம் நூற்றுண்டின் நடுவில் (கி. பி. 1748) முஸ்லிம்களின் படையெடுப்பின் போது இக்கோயில் முழுவதும் இடிக்கப்பட்டது. கருவறையிலுள்ள மூல விக்கிரகம் பின்னப்படுத்தப் பட்டது. அதிர்ஷ்ட வசமாக, அம்மனின் உற்சவமூர்த்தி திருப்பதி நம்மாழ்வார் கோவிலுக்கு எடுத்துச் செல்லப்பட்டு அங்கு பத்திரமாகப் பாதுகாக்கப்பட்டது.

பின்னர், திருச்சானூரில் இருந்த வள்ளல் முஸ்தராஜு வைத்தியுல திருமலராவ் அவர்களின் அனுமதியுடன் கோவில் நிர்வாகிகள், சென்னையில் "துபாஷ்" ஆக இருந்து வந்த ஒச்சா நாராயணப்பிள்ளை என்பவரின் உதவியுடன் கோயிலின் புனர் நிர்மாணப் பணியினை மேற்கொண்டு, வெளிச் சுற்றுச் சுவர்களைக் கட்டினர். புதிய பத்மாவதி அம்மன் சிலை கி.பி. 1773 ஆம் ஆண்டில் பிரதிட்டை செய்யப் பட்டது. திருப்பதியிலிருந்து உற்சவ மூர்த்தியும் எடுத்து வரப் பட்டது.

இச்சிலை, திருப்பதிக்கு மேற்கேயுள்ள ஸ்ரீநிவாஸ மங்காபுரத்திலிருந்து கொண்டு வரப் பெற்றுப் பிரதிட்டை செய்யப்பட்டிருக்கலாம் என்பது சில ஆராய்ச்சியாளர்களின் ஊகம். இந்த ஸ்ரீநிவாஸ மங்காபுரத்தில், திருமலைத் திருவேங்கட மூர்த்தியை விடவும் உயரமான திருவேங்கடவன் நின்ற திருக்கோலத்தில் இன்றும் சேவை சாதித்துக் கொண்டிருக்கிறுர். இக்கோயிலில் தாயார் சந்நிதி, ஆழ்வார்கள் சந்நிதிகள் ஆகியவை இருந்ததாகவும் முஸ்லீம் படையெடுப்புகளின்போது அவை தகர்க்கப்பட்டுவிட்டன என்றும் சொல்லப்படுகிறது. இடிபாடுகளுக்குள்ளான இக்கோயிலைத் தாள்ளபாக்கம் அன்னமாச்சார்யாவின் பேரர், கி. பி. பதினுருவது நூற்

ருண்டில் ஒரு முறை பழுது பார்த்துத் திருப்பணி செய்து புதுப்பித்ததாக வும் தெரிகிறது.

**கோயில் அமைப்பு:**

பத்மாவதி அம்மன் கொலுவிருக் கும் ஆலயம் அமைந்திருக்கும் கட் டிடவளாகத்தின் நுழைவாயில் கிழக்கு நோக்கியுள்ளது. நுழை வாயிலுக்கு நேர் எதிரே உள்ளது பத்மாவதி அம்மனின் ஆலயம் அன்று; கிருஷ்ண சுவாமி கோயிலே! கிருஷ்ண சுவாமி கோயிலுக்கு வட புறத்தில் தான் பத்மாவதித் தாயார் உறையும் கோயில் இருக்கின்றது. நல்ல கருங் கல் கட்டடம். கருவறையின் அளவு கிழக்கு மேற்காக 10 அடி; வடக்கு தெற்காக 7 அடி; உயரம் 8 அடி. கருவறையின் மேலுள்ள விமானம் 18 அடி உயரமுள்ள. விமானத்தின் நான்கு மூலைகளிலும் சிம்ம உருவங் கள் அமைந்துள்ளன. அண்மையில் தான் இவ்விமானத்திற்கு பொன் முலாமிட்ட தகடு வேயப்பட்டுள்ளது.

பத்மாவதி தாயார்க் கோயிலுக்குக் கிழக்கே முன்பு வரதராஜ சுவாமிக் கும் (மேற்கு நோக்கிய சந்நிதி) பெருந்தேவத் தாயாருக்கும் (கிழக்கு நோக்கிய சந்நிதி) ஒரு பெரிய கோவில் இருந்தது என்றும், அதன் மடப்பள்ளியின் கற்களைக் கொண்டு தான், பத்மாவதி அம்மன் கோயிலின் கர்ப்பகிரகம், இடைக்கழி, ஆஸ்தான மண்டபம், ரங்க மண்டபம், முதலி யவை கட்டப்பெற்றன என்றும் கி. பி. 1818இல் தயாரிக்கப்பட்ட 'பைமாயிஷி' கணக்கிலிருந்து தெரி கிறது.

மூலமூர்த்தி அழகு வடியும், கருணை நிரம்பிய, பதுமாசனத்தில் அமர்ந் திருக்கும் எழில் வடிவம்; கற்சிலை யினாலாகியது. நான்கு கைகள். மேல் இருகைகளிலும் தாமரை மலர்கள் கீழ் இடது கை வரத முத்திரையுட னும் வலது கை அபய முத்திரை யுடனும் கூடியது. உற்சவ மூர்த்தி யும் உற்சவ ஸ்ரீநிவாஸர் விக்கிரகமும் உண்டு. உள் சுற்றில் தென்புறம் வடக்கு நோக்கி சேனபதி, கருடாழ் வார், நம்மாழ்வார் சந்நிதிகளுடன் கூடிய அறையும் வடபுறம் தெற்கு நோக்கி எம்பெருமானார் சந்நிதியும் உள்ளன. அதையடுத்துக் கிழக்கே அமைந்திருப்பது ஆஸ்தான மண்ட பம். அதற்குக் கிழக்கே 54 அடி உயரமுள்ள துவஜ ஸ்தம்பமும் பலி பீடமும். அதற்குக் கிழக்கே உள்ளது ரங்க மண்டபம். இக்கோயிலில் பத்து உற்சவமூர்த்திகள் இருந்த தாக கி. பி. 1819 ஆண்டுச் செப்பு ஒன்று கூறுகிறது.

இக்கோயிலுக்கு நிரந்தர நிவந் தங்கள் எவையும் இருந்ததாகத் தெரியவில்லை. இறையடியார்கள்

அனுமந்த வாகனம்



கருடவாகனம்



சமர்ப்பிக்கும் காணிக்கைகளைக் கொண்டே கோயிலில் பூசை, வழிபாடுகள் முதலியவை நடத்தப் பெற்று வருகின்றன. ஐந்து பொன் வராகன்களுக்கு (அவற்றின் பழைய மதிப்பான ரூபாய்பதிமூன்று இரண்டு அணுவிற்கு)க் குறைவான காணிக்கை முழுவதும் அர்ச்சகர்களுக்கே உரியது.

**கிருஷ்ண சுவாமி கோயில் புராணம்:**

பத்மாவதி அம்மன் ஆலயக் கட்டிடத்தின் நுழை வாயிலுகு நேர் எதிராக அமைந்திருப்பது கிருஷ்ண சுவாமி கோவில். சிறிய கோயில்; ஆயினும், காலத்தால் மூத்தது.

வியாச முனிவரின் புதல்வரான சுகப் பிரம்ம ரிஷி இங்குள்ள சுவர்ண முகி ஆற்றின் கரையில் கண்ணனைக் குறித்துத் தவம் புரிந்தார். தீர்த்த யாத்திரை மேற்கொண்டிருந்த பலராமரும் கிருஷ்ணரும் இவ்விடம் சேர்ந்தனர். அவ்விருவரையும் ஒருசேரக் காணப்பெற்ற சுகரின் வேண்டுகோளுக்கிணங்கி அவ்விருவரும் இங்கேயே அமர்ந்தனர். கிருஷ்ணருக்கும் பலராமருக்கும் சுகர் எடுப்பித்த தனியே இந்தக் கிருஷ்ண சுவாமி கோயில். சுகர் இங்கு தவம் புரிந்ததன் காரணமாகவே இவ்வூர் திருச்சுகபுரி அல்லது திருச்சகனூர் எனப் பெயர் பெற்றது. சுகரும் தமது யோக மகிமையினால் 108 பேரைத் தோற்றுவித்து, திருவேங்கடமுடையான் கோவிலிலும் திருச்சானூர்க் கோவிலிலும் பூசை செய்வதற்கு அமர்த்தினர்.

ஆனால், சுகரின் உருவம் இங்குக் காணப்படவில்லை! அருகிலேயே ஊருக்கு மேற்கே ஆற்றின் வடகரையின்மீது அமர்ந்திருக்கும் பராசரேச்வரர் கோயிலில்தான் அவர் உருவம் காணப்படுகிறது. அக்கோயில் அமைந்துள்ள ஊர் யோகி (ஜோகி) மல்லாவரம் எனப்படுகிறது.

**கோயில் அமைப்பு:**

கிருஷ்ண சுவாமி கோயிலின் கருவறையின் அளவு 6 அடி நீளம், 6 அடி அகலம், 9 அடி உயரம். கருவறைக்கு மேலுள்ள விமானத்தின் நான்கு மூலைகளிலும் சிம்ம உருவங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. கருவறைக்குக் கிழக்கே உள்ள ஆஸ்தான மண்டபத்தில் மேலே பெரிய மணி ஒன்று தொங்கவிடப்பட்டுள்ளது.

மூலவரான கிருஷ்ணருக்கு இரண்டு கைகளே உள்ளன. இரு கால்களையும் மடித்துக் கொண்டு பத்மாசனத்தில் கிழக்கு நோக்கி அருள் பாலிக்கின்றார்.

தீர்த்த யாத்திரையினால் களைப் படைந்த பலராமர் இரு கைகளுடன்

சூர்ய வாகனம்



திருத்தேர்





பஞ்சமி தீர்த்தத்தின் போது

வடக்கு நோக்கி, வலது காலைத் தொங்கவிட்டுக் கொண்டும் இடது காலைக் குத்திட்டுக் கொண்டும் அமர்ந்துள்ளார். அயர்ச்சி மிகுதியினால் கால்களிலுள்ள பாதரட்சைகளைக் கூடக் கழட்டாமல் உட்கார்ந்திருக்கின்றார்!

உற்சவர், குழலுடன் கூடிய வேணு கோபால சுவாமி, ருக்மிணி மற்றும் சத்தியபாமா தேவியருடன் நின்ற திருக்கோலத்தில் சேவை சாதிக்கின்றார். சக்கரத்தாழ்வாரும் வீற்றிருக்கின்றார். அழகிய சிறு நரசிம்ம விக்கிரகம் ஒன்றும் உள்ளது.

மூலவர் கிருஷ்ண சுவாமி உண்மையிலேயேசந்தான கோபால சுவாமியே என்றும், சந்தான கோபால இயந்திரம் இக்கோயிலில் பிரதிட்டை செய்யப்பட்டுள்ளது என்றும் சொல்லப்படுகிறது.

பத்மாவதித் தாயார் கோவிலில் பணி புரியும் அர்ச்சகர்களே கிருஷ்ண சுவாமி ஆலயத்திலும் தொண்டு செய்கின்றனர். இக்கோயிலும் அடியார்களின் காணிக்கைகளைக் கொண்டே பராமரிக்கப்பட்டு வருகிறது. இவ்விரு கோயில்களுக்கும் நைவேத்தியங்கள் சேர்ந்தே தயாரிக்கப் பெற்று, முதலில் கிருஷ்ண சுவாமி சந்நிதியில் நிவேதனம் செய்யப்பட்டுப் பின்னர் பத்மாவதிக்குப் படைக்கப்படுகின்றன. பத்மாவதி ஆலயத்தை விடக் கிருஷ்ண சுவாமி கோயில் பழையது என்பதற்கு இதுவும் ஒரு சான்றாகக் கருதப்படுகிறது.

கிருஷ்ண சுவாமி கோயிலுக்குப் பின்புறமாகக் கல்லிலான பெரிய ஐந்து தலை நாகச்சிலை ஒன்று உள்ளது.

### சுந்தரராஜப் பெருமாள் கோயில் வரலாறு:

இது பத்மாவதி அம்மன் ஆலய வளாகத்தினுள் அமைந்திருக்கும் மூன்றாவது கோயில்.

கி. பி. 1818-இல் தயாரிக்கப்பட்ட 'பைமாயிஷி' கணக்கின்படி, இங்கு பூசையின்றி 'அழகிய திருவேங்கட நாத சுவாமி'யின் மூல விக்கிரகம் மட்டுமே இருந்தது என்றும், பத்மாவதி அம்மன் கருவறையில் பத்மாவதி மூல மூர்த்தி மற்றும் பத்து உற்சவ மூர்த்திகள் இருந்தன என்றும், அந்தப் பத்துள், இரண்டு நாச்சியார்களுடன் கூடிய 'அழகிய திருவேங்கடநாத சுவாமி' உற்சவமூர்த்தியும் இருந்தது என்றும் தெரிகிறது. 'திருவிளங்கோயி'லைப் பற்றிய குறிப்பு ஒன்று, கி. பி. 898-இல் அது இருந்ததாகக் குறிப்பிடுகிறது. மூன்றுவது ராஜராஜ சோழனின் காலத்தில் (கி. பி. 1235) 'அழகிய பெருமாள்' பற்றிய தகவல் ஒன்றும் கிடைத்துள்ளது.

'அழகிய பெருமாள்' என்னும் பெயரே 'அழகிய திருவேங்கடநாத சுவாமி' என மாறியிருக்கக் கூடும். இப்பெருமாள் இருந்த கோயில் என்ன வாயிற்று என்பது தெளிவாகத் தெரியவில்லை.

எனினும், இக்கோயில் இந்நூற்றுண்டின் துவக்கத்தில் (கி.பி. 1905) மஹந்து பிரயாக்தாஸ் அவர்கள் தேவஸ்தான விசாரண கர்த்தாவாக இருந்தபோது முற்றிலும் புதிதாகக் கட்டப் பெற்று, புதிய விக்கிரகம் பிரதிட்டைசெய்யப்பட்டது. அதற்கு ஒழுங்காகப் பூசை நடை பெறுவதற்கான ஏற்பாடும் செய்யப்பட்டது. இக்கோயில் தேவஸ்தானத்தின் நேரடியான மேற் பார்வையிலும் நிர்வாகத்திலும் உள்ளதாகும்.

### கோயில் அமைப்பு:

கிருஷ்ண சுவாமி கோயிலுக்குத் தென்புறம் அமைந்துள்ள இக்கோயிலின் கருவறை 7 அடி நீளம், 7 அடி அகலம், 9 அடி உயரம். கருவறைக்கு மேலுள்ள விமானம் அழகிய வேலைப் பாடுகளுடன் விளங்குவது. பிரதட்சிணத்துடன் கூடிய ஆஸ்தான மண்டபம் கிழக்கில் அமைந்துள்ளது. அதற்கும் கிழக்கே ரங்க மண்டபம். ரங்க மண்டபத்தின் கிழக்குக் கோடியில் கருடன் சந்நிதி உள்ளது.

இம்மூன்று கோயில்களும் அமைந்துள்ள வளாகம் நல்ல முறையில் துப்புரவாகப் பாதுகாக்கப்பட்டு வருகிறது.

**உற்சவங்கள்:**
**பிரம்மோற்சவம்.**

திருச்சானூரில் நடைபெறும முக்கியமான திருவிழா பத்மாவதி அம்மனின் பிரம்மோற்சவம் பத்மாவதி அம்மன தோன்றிய 'பஞ்சமி'யைச் சிறப்பிக்கும் வகையில் இது 'பஞசமி தீர்த்தம்' உற்சவம் என்றழைக்கப படுகிறது.

கார்த்திகைத் திங்களில எட்டு நாள் உற்சவம் மிகுந்த வைபவத்துடன கொண்டாடபபடுவது. நாள் தோறும் மாலை வேளைகளில் ஊஞசல் சேவை கோயிலினுள் நேர்த்தியாக அலங்கரிக்கப பெற்ற பந்தலில் நடைபெறும். சங்கீத நிகழ்ச்சிகள் மற்றும் நாதஸ்வர இசை ஆகியன திருவிழாவின் கவர்ச்சி அம்சங்கள்.

அங்குரார்ப்பணத்திற்கு மறுநாள் முதல், திருவிழா. முதல் நாள் காலை திருச்சி உற்சவமும் கொடி யேற்றமும், அன்று மாலை சின்ன சேஷ வாகனம். இரண்டாவது நாள் காலையில் டாம்ஜான் உற்சவம் மாலையில் அன்ன வாகனம். மூன்றுவது நாள் காலையில் முத்துப்பந்தல், மாலையில் சிம்ம வாகனம். நான்காவது நாள் காலையில் கல்ப விருட்சம், மாலையில் சர்வபூபால வாகனம். ஐந்தாவது நாள் காலையில் பல்லக்கு, சாயங் காலம் வசந்தோற்சவம், இரவில் யானை வாகனம்; ஆறுவது நாள் காலையில் ஹநுமந்த வாகனம், மாலையில் கருட வாகனம். ஏழாவது நாள் காலையில் சூர்யப பிரபை, மாலையில் சந்திரப பிரபை எட்டாவது நாள் காலையில் திருத்தேர், மாலையில குதிரை வாகனம்

ஒன்பதாவது நாள் பஞசமி தீர்த்தத் திருவிழா. பத்மாவதி அம்மன் பத்ம ஸரோவரத்தின் கிழக்குக் கரையில் கட்டப்பட்டுள்ள தீர்த்த வாரி மண்டபத்திறகு எழுந்தருளுவாள்.

திருமலையிலிருந்து வேங்கடவனின் அன்பளிப்பாக மஞ்சள், புஷபம், துளசி, புடவை, பிரசாதங்கள் முதலியவை யானையின்மீது ஊர்வலமாக எடுத்து வரப்படுத் தாயாரிடம் சேர்க்கபபடும். திருமலைக் கோவிலிருந்து தாயாருக்கான பிரசாதங்கள் வெளியே கொண்டு வரப்பட்டவுடன் திருமலைக் கோயில் மூடப்பட்டுவிடும் திருச்சானூரில் சக்ர ஸ்நானம் ஆகிய பின்னரே, திருமலைக் கோவில் தரிசனத்திற்காகத் திறக்கபபடும் தாயாரின் பிறந்த நாள் திருவிழாவில் திருவேங்கடவனே தேரில் வந்து கலந்து கொள்கிறுன எனபது ஐதிகம். மேலும், அன்று ஒரு தினம் மட்டுமே திருவேங்கடவனின் துளசி பிரசாதம் அடியார்களுக்குக் கிடைக்கும.

பஞசமி தீர்த்தத் திருவிழாவின் போது திருக்குளத்தில் ஸ்நானம் செயதால் அனைத்து நலிவுகளும் அகலும் என்பது மக்களின் நம்பிக்கை. அதற்காகவே ஆயிரக் கணக்கில் பக்தர்கள் கூடுகின்றனர்.

**தெப்போற்சவம்:**

பத்ம சரோவரத் திருக்குளத்தில் ஆனி மாதத்தில் தெபபோற்சவம் ஐந்து நாட்கள நடைபெறும். முதல் நாள் ருக்மிணி, சத்யபாமையுடன் கூடிய வேணுகோபால சுவாமி, இரண்டாவது நாள் ஸ்ரீதேவி, பூதேவியுடன் கூடிய சுந்தரராஜப் பெருமாள், எஞ்சிய மூனறு நாட்களிலும் பத்மாவதித் தாயார் தெபபத்தில எழுந்தருளி, பக்தர்களுக்குக் காட்சி அளிப்பர் முன்பு தை மாதத்தில் கார்வேடநகரம் ராஜா தெப்போற்சவம் நடத்தியதை கி. பி. 1819 'பைமாயிஷ' கணக்கு குறிபபிடுகின்றது. கண்ணைப பறிக்கும் ஒளி விளக்குகளினுல் அலங்கரிக்கப பெற்ற தெப்பத்தில் கடவுளர் அமர்ந்திருக்கும் திருக்கோலம் இன்னல் தீர்பபது, இன்பம பயபபது.

**வசந்தோற்சவம்:**

பத்மாவதி அம்மனுக்கு வைகாசி மாதம் மூன்று நாட்கள் நடைபெறும் திருவிழா. இரண்டாம் நாளன்று வெள்ளித் தேரில் அம்மன் பவனி வருவாள்.

**அவதாரோற்சவம்:**

ஆனி மாதம் சுந்தரராஜப் பெருமாளுக்கு மூன்று நாள் நடைபெறும் திருவிழா.

**நவராத்திரி விழா:**

சில ஆண்டுகளாக நவராத்திரித் திருவிழா மிகச் சிறப்பாகத் தனியாரால் நடத்தப்பட்டு வருகிறது. நாள்தோறும் அம்மனைக் கொலுவில் இருத்தி, இன்னிசை நிகழ்ச்சிகள் நடத்தி விழாக் கொண்டாடப்படுகிறது.

**தை வெள்ளிக்கிழமை:**

தை மாதத்திய வெள்ளிக் கிழமைகள் சுமங்கலிகளுக்குச் சிறப்பான நாட்கள. நல்ல மனம் படைத்த பெரியவர்கள் சிலர் தை வெள்ளிக் கிழமைகளில் சுமங்கலிகளுக்கு, தாயாரின பாதங்களில் சமர்பபிக்கப் பட்ட மஞ்சள் தாலிச் சரடுகளையும், மஞசள், குங்குமம், வெற்றிலை, பாக்கு, பழம், வளையல் ஆகியவற்றோடு கொடுபபதற்கு ஏற்பாடு செய்துள்ளனர். தை வெள்ளிக் கிழமைகளில் சுமங்கலிகளின் கூட்டம் திருச்சானூரில் கருத்தைக் கவர்வதாகும்.

**பத்மாவதி அம்மனின் தனிச்சிறப்பு**

திருசசானூரில் அமர்ந்திருக்கும் அன்னை பத்மாவதியின் தனிச்சிறப்பு என்னவெனில், அவள் ஒரு தனித் தெய்வமாகவே பூசிக்கபபடுகின்றுள். விடியற்காலைத் திருப்பள்ளி எழுச்சி, சஹஸ்ர நாம அர்ச்சனை, நைவேத்தியங்கள, வெள்ளிக் கிழமை திருமஞ்சனம் (திரு நீராட்டு). எல்லா வாகனங்களுடன கூடிய பிரம்மோறசவம், தேர்விழா, தெபபோற்சவம் முதலிய அனைத்து விழாக்களும் தாயாருக்கு எடுக்கபபடுகின்றன. இவவெல்லா விழாக்களிலும் பெருமாள் உடன் இல்லாது அம்மன் தனியாகவே விழாப பூணுகிறுள். இத்தகைய சலுகைகளுடன கூடிய விழாக்கள் வேறு எந்த அம்மனுக்கும் எடுக்கப் படுவதில்லை எனபது மிகையே அன்று.

★

# தி. தி. தேவஸ்தான சமய நூல்கள்

## தமிழ்

| | | ரூ. பை. |
|---|---|---|
| அன்னமயயா ஓர் அறிமுகம் | .. | 1-00 |
| பகவத் சந்தேசம் | ... | 0-50 |
| இந்து சமயக் கைபேடு | ... | 1-50 |
| ஹனுமான் | ... | 0-50 |
| கண்ணன் பேசுகிறான் | .. | 0-50 |
| மாங்கல்ய விருத்தி ஸ்தோத்திரம் | .. | 0-10 |
| சித்திர சுப்ரபாதம் | .. | 8-00 |
| ஸ்ரீவெங்கடேஸ்வர சுப்ரபாதம் (பொருளுடன்) | ... | 0-50 |
| ஸ்ரீ வெங்கடேஸ்வர சுப்ரபாதம் | . | 0-15 |
| சித்தாந்த சங்கரஹம் | . | 2-50 |
| திருவேங்கட கலசம் | ... | 0-15 |
| சித்திரத் திருப்பாவை | ... | 8-25 |
| ஏழுமலை யாத்திரை | ... | 0-75 |
| ஹனுமன் கதை | ... | 2-00 |
| திருமலை வழி காட்டி | ... | 0-10 |
| ஸ்ரீ வெங்கடேஸ்வரா கல்யாணம் | ... | 11-50 |
| கண்ணன் கதை | ... | 2-00 |
| நித்யாநுஸந்தானம் (வடகலை) | ... | 4-00 |
| நித்யாநுஸந்தானம் (தென்கலை) | ... | 4-50 |
| அபிமன்யு | .. | 2-00 |
| கிருஷ்ணனும் நரகாசுரனும் | ... | 2-00 |
| பகவத் கீதை | ... | 2-00 |

## ஆங்கிலம்

| | Rs Ps |
|---|---|
| Administration of Temples | 5—00 |
| Alamel Mangapura | 0—25 |
| Ekantaseva | 5—00 |
| Govinda brochure | 3—00 |
| History of Tirupati Vol II | 15—00 |
| Melodies of staff notation | 10—00 |
| Lord Venkateswara & Alwars | 1—00 |
| Acharya Hridayam | 8—25 |
| Theory of Knowledge | 5—00 |
| Tirupati Sri Venkateswara | 40—00 |
| S V Suprabhatham with meaning | 0—50 |
| Heart of Bhagavatham | 3—00 |
| S V Sachitra Suprabhatham . | 11—00 |
| Tirumala Temple | 80—00 |
| Pilgrimage to Uttarakhanda | 3—75 |
| Tiruppavai | 10—00 |
| Vision of Aryan Glory | 1—50 |
| Uddavageetha | 5—00 |
| The Wise Minister & other stories | 1—00 |
| Sree Venkateswara | 1—00 |
| Vishnu Sahasranamam 999 (Namams) | 1—00 |
| Harischandra | 1—00 |
| Kardama & Devahuti | 1—00 |
| Maharshi Valmiki | 2—00 |
| Druva | 2—00 |
| Bhishma | 2—00 |
| Vedavyasa | 2—00 |
| Tenali Ramakrishna | 2—00 |
| Ganesha | 2—00 |
| Thyagaraja | 2—00 |
| Drowpadi | 2—00 |
| Bhageerada | 2—00 |
| Prahlada | 2—00 |
| Andal | 2—00 |
| Kalidasa | 2—00 |
| Vadiraja | 2—00 |
| Pillai Lokacharya | 2—00 |
| Dhadhichi | 2—00 |
| Nachikata | 2—00 |
| Namadeva | 2—00 |
| Garuda | 2—00 |
| Ramanujacharya | 2—00 |
| Narada | 2—00 |
| Vedantadesikaru | 2—00 |
| Why am I Hindu? | 1—50 |
| Purushasuktham | 2—00 |
| History of Tirupati Vol I | 15—00 |
| Homage to Kalankari | 120—00 |
| Yoga & Yoga | 2—00 |
| Viswamithrudu | 2—00 |
| Idle child | 0—05 |

## வடமொழி

| | | ரூ. பை. |
|---|---|---|
| எஸ். வி. அஷ்டோத்ரம் | .. | 0-62 |
| எஸ். வி. சுப்ரபாதம் | .. | 0-12 |
| தத்வ ஸங்க்யானம் | .. | 2-00 |

குறிப்பு: பிரதிகளுக்கு ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

**THE WELFARE OFFICER**
Publication Wing (Administrative Building)
T. T. D. TIRUPATI.

# ★ ★ ஸ்ரீ வாதிராஜர் ★ ★

ஸ்ரீ மத்வரால் ஸ்தாபிககபபட்ட எட்டு மடங்களில் ஒனறான சோதே மடத்தை அலங்கரிததவரும, மதவ சித்தாந்தத்தின் சிறபபுகளை உலகுக்கு எடுத்துக்காட்டியவரும, 120 ஆண்டுகள் வாழநதவரும் ஆகிய மகான ஸ்ரீ வாதிராஜர் ஆவார்; இவரது தோற்றம் 1480 AD. மறைவு 1600 AD.

இவருடைய பிறபபு மிக மிக அதிசயமானது: இவரது தநதையின பெயர் ராமாச்சார்யா. தாயின் பெயர் சரஸ்வதி இவர்களின இருப்பிடம ஹீவினகரே. (கர்நாடாக மாநிலம் தென் கன்னட தாலூக்கா) இவர்கள, பிள்ளை வரம் வேண்டி கும்பாசி என்ற ஊரில் உள்ள பூவராக சுவாமியை வேண்டினர் அச்சமயம் அவவூரில் முகாமிருநத சோதே மடத்தின அதிபதி வாகீசதீர்த்தா கனவில் பூவராகர் ''நாளை நடைபெறும் பூஜைக்கு ராமாச்சாரயா தம்பதிகள் வருவார்கள். பிள்ளை வரம் வேண்டி அவர்களுககு பல மந்திராட்சதை கொடுத்து 'உங்களுக்குப பிளளை பிறக்கும். ஆனால் முதல் பிள்ளையை மடத்திறகு கொடுக்க வேண்டும்' என்று கூறிட. அவ்வாறே சுவாமிகளும் கூறினார் இதைக் கேட்டதும் ராமாச்சார்யாவிறகு மனது சங கடபபட்டது. இதைக கவனிதத வாகீசதீர்த்தா 'உனது குழந்தையை பறித்துக்கொள்ள வேண்டும் எனற



திரு எஸ் கோவிந்தராஜன்,
கல்பாக்கம

எண்ணம் எனனிடம் இல்லை. பூவராகர் கனவில் எனக்கு உத்தரவிட்டதைக் கூறினேன். ஆனால் ஒனறு மட்டும் என்னால் சிறிது தளாத்தப் படும். அது எனனவெனில் குழந்தை வீட்டிற்கு வெளியே பிறந்தால மட்டும் மடத்திறகு கொடுத்து விட வேண்டும்''. என்று கூறினார் இதைக் கேடடதும் சந்தோஷம் அடைந்தார். குழந்தை எபபடி வெளியே பிறக்கும்? என்ற உறுதியுடன் இருந்தார் உற்றகாலம் வந்தவுடன மனைவிக்கு எச்சரித்து எங்கும் வெளியே செல்லக்கூடாது எனறு உத்தரவிட்டார்.

மாக சுத்த துவாதசி (மாக மாதத்தின் வளாபிறையின 12-ம் நாள் 1480 AD, ஓர் அதிசயம் நடநதது துவாதசி சாப்பாடு தன விருந்தினர்களுடன சாபபிட்டுக்கொண்டு இருக்கும்போது கணவரிடம் நம் நிலத்தில் மாடு மேயகிறது என்று கூறினாள்.

அவர் பதட்டத்துடன், சிறிதும் யோசிக்காமல் 'ஒரு கொம்பு எடுத்துச்சென்று மாட்டை விரட்டவும்' என்று தன் மனைவிக்குக் கட்டளையிட்டார். கால வெய்யிலில் பதட்டத்துடன் ஓடியதால் மயக்கம் அடைந்து ஒரு மரத்தின் அடியில் விழுந்து விட்டாள். இச்சம்பவத்தினை வாதிச தீர்த்தர் தமது ஞான திருஷ்டியால் அறிந்து இதற்கான எல்லா ஏற்பாடுகளுடனும் அந்த இடத்திற்கு விரைந்தார். குழந்தை பிறந்ததும் பூமியினுடைய ஸ்பரிசம் படாமல் தங்கத்தாம்பாளத்தில் தாங்கிப்பிடிக்கும்படி கட்டளையிட்டார். மிகவும் சந்தோஷப்பட்டுத் தனக்குக் கனவில் பூவராக சுவாமி கூறியது அனைத்தும் நடைபெறுவதைக் கண்டு மகிழ்ச்சியடைந்தார். குழந்தைக்குப் பூவராகன் என்று பெயர் வைத்தார். குழந்தை வளர வளர அதனுடைய புத்தி கூர்மை அனைவரையும் கவர்ந்தது. பாலகனுக்கு முறைப்படி நடக்க வேண்டிய காரியங்கள் அனைத்தும் சிறப்பாக நடைபெற்றன. சிறிய வயதிலேயே வேதங்கள் கற்று வேத விற்பன்னன் ஆனான். பாலகனுடைய மதி நுட்பத்தை வியந்து பாராட்டி இவனுக்கு வாதிராஜர் என்ற பட்டப்பெயர் கொடுத்து கௌரவித்தார் வாகீசதீர்த்தர்.

இந்தியா முழுவதும் புனிதப் பயணம் செய்ய எண்ணி முதன் முதலாக தன்னைப் பெற்றவர்களிடம் ஆசி பெறச் சென்றார். தாயை நமஸ்காரம் செய்யும்போது சரஸ்வதி அம்மையார் மகனிடம் ஒரு வேண்டுகோள் விடுத்தார் "நீ பிறப்பதற்கு முன் பூவராகசாமிக்கு லட்சாபரணம் (Lakshabaranam) செய்விப்பதாக வேண்டிக்கொண்டேன். இந்நிலையில் என்னால் அதை நிறைவேற்ற முடியாது" என்று கண் கலங்கினார். தாயிடம் சபதம் செய்து நான் நிறைவேற்றுகிறேன் என்று கூறினார். பிற்காலத்தில் அதை செய்தும் முடித்தார். தாயினிடம் விடை

பெற்றுக்கொண்டு புனிதப் பயணத்தைத் தொடங்கினர்

ஊர் ஊராகச் சென்று கொண்டிருக்கும் வேளையில் தன்னுடைய இரண்டு கொள்கைகளைக் கடைபிடித்தார்

1 ஸ்ரீ மத்வருடைய சித்தாந்தங்களைப் பரப்புவது.

2 மனிதகுலத்திற்குச் சேவை செய்வது.

வாதிராஜர் நிகழ்த்திய அற்புதங்கள் எழுதிமாளாது. குறிப்பாக சில விஷயங்களை சொல்லித்தான் ஆக வேண்டும்.

திருப்பதி வேங்கடாஜலபதியை தரிசிக்கஎண்ணி காடுகளையும், பாறைகளையும் தாண்டி மிகச் சிரமப்பட்டு ஏழுமலைகளையும் கடந்து சென்றார் (அக்காலத்தில் படிகட்டுகள் இல்லை) பாறைகள் எல்லாம் அவரது கண்களுக்குச் சாளக்கிராமமாகத் தென்பட்டன. தன பாதம் படாமல் முட்டியினாலேயேதாவித்தாவிச் சென்றார். இவ்வளவுசிரமப்பட்டுச்சென்றும் கோயில் கதவு சாத்தப்பட்டது. இவருக்கு அன்றே தரிசனம் கிடைக்கவில்லை மிகவும் வேதனைப்பட்டார். கோயில் நிர்வாகிகள் இனிமேல் நாளைதான் தரிசனம் என்று கண்டிப்பாகக் கூறிவிட்டார்கள். மனமுருகி வட திசையில் நின்று கொண்டு ஸ்ரீனிவாசனைத் தியானித்துப் பாடினார். ஸ்ரீனிவாசன் தன் பக்தர்களை என்றுமே கஷ்டத்தில் ஆழ்த்தியதாகச் சரித்திரமே இல்லை. பாடி முடித்ததும் கோபுரத்தின் விமானத்தில் சிற்பி செதுக்காத அருமையான வடிவமாக வாதிராஜருக்குக் காட்சி அளித்தார். இன்றும் வேங்கடவனை வலம் வரும் போது, விமான ஸ்ரீனிவாசனைப் பார்க்காமல போக மாட்டார்கள். இன்னும் சிலர் இதைப் பார்த்தால்தான் தங்கள் யாத்திரை பூர்ணமாயிற்று என்றும் எண்ணுகின்றனர்.

கோயில் நிர்வாகியின் கனவில் ஸ்ரீனிவாசன் தோன்றி "வந்திருக்கும் வாதிராஜருக்கு பூர்ண மரியாதை கொடுத்து அவரை அவர் திருப்தி அடையும் வரை என்னைத் தியானித்து பூஜிக்கட்டும்" என்று உத்தரவிட்டார் மேலும் 'அவருக்கு எனது விக்ரகமும் ஸ்ரீதேவி பூதேவி ஆகிய விக்கிரகங்களைக் கொடுக்கவும்' என்றும் கூறினார். மறுநாள் காலை வாதிராஜருக்கு பூர்ண மரியாதையுடன் வரவேற்பு கொடுத்து அவரை பூஜிக்கும்படி கோயில் நிர்வாகிகள் கேட்டுக் கொண்டனர். வாதிராஜரும் மன நிறைவுடனும் மிகுந்த உற்சாகத்துடனும் ஸ்ரீனிவாசனுக்குப் பூஜை செய்து, 108 சாளக்கிராமங்கள் அடங்கிய மாலையை அணிவித்து அழகு பார்த்தார். இன்றும் அந்த மாலை வேங்கடாஜலபதியை அலங்கரித்துக் கொண்டு இருக்கிறது வாதிராஜருக்கு கனவில வேங்கடாஜலபதி தோன்றி கோயில் நிர்வாகிகளால் கொடுக்கப்படும் விக்ரகங்களை எடுத்துச் செல்லவும் என்று கட்டளையிட்டார். ஸ்ரீ சோதே மடத்தில் உள்ள இந்த விக்ரகங்களைச் சேவித்தால திருப்பதி போய் வந்த பலன் கிடைக்கும் என்று கூறப்படுகிறது

ஸ்ரீ வாதிராஜர் ஹம்பி (Hampi)க்கு விஜயம் செய்யும் போது (1509-1530 AD) கிருஷ்ணதேவராயர் அச்சமயம் ஆட்சி செய்து வந்தார். ஸ்ரீவாதிராஜரை அன்புடன் உபசரித்தார் அரசனை நோக்கி நீங்களும் உங்களது நாட்டு மக்களும் நலமாக உள்ளனரா என்று வினவினார் அரசன் சற்று வருத்தத்துடன் ஒளிவு மறைவில்லாமல் 'எனது நிதிநிலை மிகவும் மோசமாக உள்ளது' என்று கூறினன். 'கஜானா காலி ஆகிவிடும் நிலைமை உள்ளது' என்றான. ஸ்ரீ வாதிராஜர் தனியே அரசனை அழைத்துத் தன்னுடன் வரச் சொன்னார். இருவரும் ஒரு காட்டிற்குள் சென்று அங்குள்ள ஒரு பாறையில் தன் கமண்டலத்தில் உள்ள தீர்த்தத்தினால் அப் பாறையில் தெளித்து பிரார்த்தனை செய்தார் ஒரு பெட்டியின மூடி திறந்து கொள்வது போல் பாறை திறந்து கொண்டது உள்ளே சென்று பார்த்தால் பொற்.குவியல்களும, வைரம் மற்றும் விலை உயர்ந்த கற்களும் இருந்தன. அரசன் வியந்து போனாலும அதை எடுத்துக் கொள்ள மனம் விரும்பவில்லை. பின்பு வாதிராஜர் வெள்ளியினால் செய்யப்பட்ட இரண்டு விக்ரகங்களை எடுத்துக் கொண்டார். ஒன்று விட்டலரது மற்றது ஸ்ரீ ராமர். இவைகள் வாலியினாலும், சுகரீவனாலும் பூஜிக்கப்பட்டு வந்துள்ளன. இதைக் கவனித்த கிருஷ்ணதேவராயர் மிகுந்த மகிழ்ச்சியுடன் பொக்கிஷங்களை மிகுந்த மரியாதையுடன் ஏற்றுக்கொண்டு, நலிந்து போயிருக்கும் தன் பொருளாதாரச் சிக்கலை தீர்த்துக் கொண்டார்.

பின்பு ஸ்ரீவாதிராஜர் அரசனை தன்னுடைய பரியாயம் உடுப்பியில் நடைபெறப்போகிறது (1532 AD) அச்சமயம் கட்டாயம் தாங்கள் உடுப்பிக்கு வரவும் என ஆணையிட்டார். அவ்வாறே அரசனும் சென்று அங்குள்ள அனந்தீஸ்வரர் கோயில், சந்திர மௌளீஸ்வரர் மற்றும் ஸ்ரீ கிருஷ்ண மடம் முதலிய கோயிலகளைப் புதுப்பிக்கும் திருப்பணியைச செய்து முடித்தார.

ஸ்ரீவாதிராஜர் பேலூரில் இருந்த சமயம் ஒரு சம்பவம் நடந்தது இதை எழுதும் போதும மெய்சிலிர்கின்றது படிப்பவர்களும் உணர்வார்கள ஒரு வெள்ளைக் குதிரை தினமும் கடலைச் செடியை (Bangal gram plant) மேய்ந்து கொண்டு வந்தது நிலத்தின் சொந்தக்காரர் அக்குதிரையை எப்படியாவது பிடித்துக் கட்ட வேண்டும் என எண்ணி பின் தொடர்ந்-

# திருமலையில்
## தி. தி. தேவஸ்தான
# காட்டேஜ் கட்டண விவரங்கள்

| எண் காட்டேஜ் விவரம் | கட்டணம் (நாள் ஒன்றிற்கு) |
|---|---|
| டி. பி. சி. | ரூ.25/- ரூ 15/- ரூ.10/- |
| டி. பி. சி. 3வது வரிசை (ஹீட்டர் இல்லாதது) | ரூ. 10/- |
| ஹில் வியூ டீலக்ஸ் காட்டேஜ | ரூ 20/- |
| ஹில் வியூ விருந்தினர் விடுதி | |
| பெரியன | ரூ. 40/- |
| சிறியன | ரூ. 20/- |
| ஹில் வியூ காட்டேஜ | ரூ. 10/- |
| சங்கு மிட்டா காட்டேஜ் | ரூ. 20/- |
| சேஷாத்ரி நகர் காட்டேஜ் | ரூ. 20/- |
| அஞ்சனாத்ரி காட்டேஜ | ரூ. 20/- |
| கருடாதரி நகர் காட்டேஜ் | ரூ. 20/- |
| திருமணக் கூடம் (3வது சத்திரம்) | ரூ. 15/- |
| சிறப்பமைப்புகொண்ட காட்டேஜுகள் | ரூ. 75/- |
| டி. சி சி (உள்ளே உள்ள காட்டேஜுகள்) | ரூ. 50/- |
| **எஸ். வி. விருந்தினர் விடுதி,** | |
| பெரிய அறைத்தொகுதிகள் | ரூ. 50/- |
| மூன்று அறைத்தொகுதிகள் | ரூ. 40/- |
| சிறிய அறைத்தொகுதிகள் | ரூ. 35/- |
| எச ஆர். ஜி காட்டேஜுகள் | ரூ. 150/- |
| மோடிபவன | ரூ. 100/- |
| **திருமணக்கூடங்கள் (காட்டேஜுகள்)** | |
| பாலாஜி காட்டேஜ் | ரூ. 500/- |
| ரூயா காட்டேஜ எண 248 | ரூ. 80/- |
| கோகினேனி காட்டேஜ எண் 226 | ரூ. 80/- |
| சி. சி. காட்டேஜ எண்; 237 | ரூ. 100/- |
| எஸ். எம். சி. கிழக்கு எண் : 272 | ரூ. 50/- |
| ஏ. டி. சி. எண் 99 | ரூ. 80/- |
| டி. பி. (உள் பக்க காட்டேஜ) | ரூ. 50/- |
| டி. பி. வி. வி. சி. | ரூ. 50/- |
| டி. பி. காட்டேஜ (தனிச் சிறப்புக் கொண்டது) | ரூ. 75/- |
| ஏ. டி. சி. மற்றும் டி. பி. சி. ஒரு அறைத் தொகுதி ஹீட்டர் உள்ளது | ரூ. 12/- |
| ஹீட்டர் இல்லாதது | ரூ. 10/- |

தார். அக்குதிரை நேராக வாதிராஜர் இருக்கும இடம் வரை சென்று பினபு மறைநது விட்டது. நடந்த தவைகளை வாதிராஜரிடம் கூறினர். 'இதற்கான நஷ்டஈடு என்ன வேண்டுமோ அதை நான் தருகிறேன். ஆனல் நீ மிகவும் கொடுத்து வைத்தவன். நீ குதிரை வடிவில கண்டது ஹயக்கிரீவர்தான', என்றுவாதிராஜர்கூறினர். இதைக் கேட்டதும் அவன் வியப படைந்தான் 'எனக்குப பணம் வேண்டாம் மீண்டும் நான் அந்த வெள்ளைக குதிரையை பார்க்க வேண்டும' என்று மன்றடினை அதற்கு சுவாமிகள 'மறுபடியும் பாாத்தால் பார்வை போய விடும்' என்று கூறினர் 'போனலும் பரவாயில்லை ஒரு கண்ணை வெண்ணையினல் அடைத்துக்கொண்டு மறு கண்ணல் பாாக்கிறேன்' என்று கூறினன்.

தினசரி பூஜை முடிந்ததும் வாதிராஜர் தன தலையில தாம்பாளததை வைத்துக் கொண்டு அதனுள் பிரஸாதமான ஹயக்கிரவத்தை வைத்துக் கொளவாா பினனுலிருந்து குதிரை வந்து புசிக்கும் புனிதமான காட்சியைக் கண்ட மறுகணமே அவனது ஒரு கண் குருடானது. தன்னுடைய கடைசி காலம் வரை ஒரு கண்ணினலேயே வாழ்நதான எந்த நிலத்தை அந்தக் குதிரை மேய்ந்ததோ அதையே வாதிராஜருக்குத் தானமாகக கொடுத்துவிட்டான

ஸ்ரீவாதிராஜருடைய அற்புதங்கள எழுதிமாளாது. 120 ஆண்டுகள வாழநத இந்த மகான் எழுதிய முககிய நூலகள பினவருமாறு :

1. தீர்த்த பிரபந்தா

(எல்லா விதமான புண்ணிய க்ஷேத்திரஙகளின வரலாறு அடஙகும)

2 யுக்தி மல்லிகா
3 நியாய ரத்னவளி
4 ருக்மணி விஜயா.

(19 நாட்களில் 19 சர்கங்களாக (Chapters) எழுதியது. இதனல் கவிகுலதிலகா என்ற பட்டம் இவருக்குக் கிடைத்தது) ★

# பாவநாராயணர்

பக்த மார்க்கண்டேயர் சிரஞ்சீவி வரம் பெற்றபின் எமன் மரணமடையவே பூமியில் எல்லா ஜீவஜந்துக்களும் நிறைந்து பிரம்ம வரை ஆயுள் உள்ளவர்களுக்கு ஆயுள் வளர்ந்து யாதொரு பயமுமில்லாமல் போகவே நாட்டில் அக்கிரமங்களும், பாபங்களும் அதிகமாகி பூமி பாரம் தாங்க முடியாமல் பூமிதேவி பிரம்மதேவரிடம் முறையிட, பிரம்மதேவர் பூமிதேவியை அழைத்துக்கொண்டு வைகுந்தத்திற்குப் போய் மகாவிஷ்ணுவிடத்தில் வணங்கி 'பூமிபாரம் தாங்க என்னால் முடியவில்லை இதற்கு விமோசனம் இல்லையா' என்று பூமிதேவி கேட்க, நாராயணன் இதற்கு ஓர் விமோசனம் செய்வதாகச் சொல்லி பிரம்மதேவரையும், பூமிதேவியையும் அழைத்துக்கொண்டு கைலாசம் சென்று ஈஸ்வரனிடத்தில் முறையிட, முன்போல எமனை எழுப்புவித்தால் பூமிபாரம் தீரும் என மகாவிஷ்ணு முதல் பிரம்ம தேவர் வரை எடுத்துச் சொல்ல அதைக் கேட்டு ஈஸ்வரன் எமனை, "இன்று முதல் பக்தியோடு பூஜிக்கும் சாதுக்களையும், கற்புக்கரசிகளையும், தன் உயிரைப்போல மன்னுயிர்களைப் பாதுகாக்கும் ஜீவகாருண்யமுள்ளவர்களையும், மாதா, பிதா, குரு அன்புடன் தொண்டு செய்கிறவர்களையும் மற்றுமுள்ள வேதகாரியங்கள் செய்யும் பக்தர்களையும் நீ முன்பின் விசாரித்துச் செய்ய வேண்டும். அப்படி இல்லாது உன்னிஷ்டப்படி செய்வாயாகில் இதற்கு மேலான தண்டனை அடைவாய். இது தவிர பரம துஷ்டர்களால் கொலை, களவு, கட்காமம், பொய் முதலிய பலவித அக்கிரமங்களைச் செய்தவர்களை நீ தண்டிக்கும்படியாகவும் உனக்கு எமதர்மன் என்று பெயர் வழங்குவதுடன் இந்தப் பிரகாரம் நீதியுடன் நடந்து வா" எனக் கட்டளையிட்டார். எமதர்மன் வணங்கிச் சென்று தனது இராஜ்ஜியத்தை அடைந்தார்.

சிலகாலம் சென்றபின், பிரம்மனும், தேவேந்திரனும், தேவர்களும் சேர்ந்து கைலயங்கிரிக்குச் சென்று சிவனை வணங்கி, தங்களது குறையான வஸ்திரங்கள் இன்றி நிர்வாணமாய் இருக்கிறதைத் தெரிவிக்க, உடனே சிவனார் தனது சிவகணங்களில் ஒருவரை அழைத்து மார்க்கண்டேய முனிவரை அழைத்துவர, மார்க்கண்டேயர் உடன்வர, அங்கு வீற்றிருந்த சிவன், பிரம்மாதி தேவர்களை நமஸ்கரித்து தன்னை வரவழைத்த காரணம் யாதென்று கேட்க, அதற்கு சிவனார், "பிரம்ம தேவனால் படைக்கப்பட்ட தேவர்களும், மற்ற சமஸ்த ஜனங்களும் ஆடையின்றி நிர்வாணமாயிருப்பதாலும், இக்குறையை நிவர்த்திக்கும் பொருட்டும், காளுவாசூரனையும், அவனது தம்பி கரலாசூரனையும் வதைக்கும் பொருட்டும் நீ உடனடியாக புத்திர காமேஷ்டியாகம் செய்ய வேண்டும். நீ செய்கின்ற யாகத்தில் மூன்று லோகங்களுக்கும் ஜோதி வாய்ந்த விஷ்ணு அம்சம் பொருந்திய சமஸ்த ஆயுதங்களுடன் ஸ்ரீபாவநாராயணர் தோன்றுவார். அவரால் மானசமரக்ஷணைக் காத்து காளுவாசூரனையும், அவனது தம்பிகரலாசூரனையும் சம்ஹாரம் செய்து தாமம் தழைத்து நிற்க அக்கிரமத்தை ஒழித்து, சுபிட்சம் நிலவ உடனே யாகத்தை ஆரம்பி" என ஆணையிட்டார். உடனே மார்க்கண்டேயர் நமஸ்கரித்து, 'உடனே யாகத்தை ஆரம்பிக்கிறேன்' எனச் சொல்லி தனது ஆஸ்ரமம் வந்தடைந்தார்.

கூடிய சுபயோக சுபதினத்தில் யாகத்தை வளர்த்தார் அவ்யாகத்தில், ஸ்ரீ லக்ஷ்மிசமேத மகாவிஷ்ணு, பார்வதி சமேத சிவபெருமான், சரஸ்வதி சமேத பிரம்மன், விநாயகரும், இவர்களைப் போல எல்லா ரிஷிகளும், முனிவர்கள் தங்களுடைய பத்தினிமார்களுடனும் பிரவேசித்திருந்தனர்.

யாகம் முறைப்படி மூன்று நாள் இரவும்பகலும் மந்திரங்கள் சொல்லி ஹோமம் வளர்த்து பூஜை செய்தார்கள். பின்பு புத்திர காமேஷ்டி ஹோமம் நடத்தி அந்த யாகத்தில் அவிர்ப்பாகத்தின் பொருட்டு சமஸ்த தேவர்களும் வந்தார்கள். அச்சமயத்தில் அக்கினி குண்டலத்திலிருந்து நாகஸ்திரம், பாசுபதாஸ்திரம் முதலிய ஆயுதங்களுடன் 'பஞ்சபுட்டி' என்னும் யௌவன புருஷன் வெளிப்போந்தான். 'பஞ்சபுட்டி' விஷ்ணு, சிவனை வணங்கி ஆசிகோரிய பின், அவ்விருவரும், 'தேவர்களும் மானிடர்களும் ஆடையின்றி இருக்கின்றார்கள், அவர்கள் மானத்தை நீ காக்க வேண்டு'மென்று கேட்க பஞ்சபுட்டி ஆலோசனையோடு அமர்ந்திருக்கின்ற வேளையில், மார்க்கண்டேயரும், பிரம்ம ரிஷிகளும் இடைவிடாத ஹோமம் வளர்த்துக் கொண்டிருந்தார்கள்.

அதுபோழுது அவ்யாகத்திலிருந்து நவரத்தின கிரீடமுடன் கோடி சூரியப்பிரகாசம் பொருந்திய அழகுடையவனாகவும், சங்கு, சக்கரத்துடன், சாவ ஆயுதங்களுடனும் யக்ஞோபவீதம் திவ்ய சந்தனம், பரிமளம் அணிந்து ஒரு திவ்வியப் புருஷன்

திரு கே ஆர். ஜெயவேலு—சேலம்.

தோன்றினர்; அங்கு வீற்றிருந்த திருமூர்த்திகளும், லக்ஷ்மி, பார்வதி, சரஸ்வதி, தேவர்களும், பிரம்ம ரிஷி களும் மற்றுமுள்ளவர்களும ஆசி கூறி இந்த உத்தமனுல நமது மான ஹீனம நீங்க வஸதிரம தரிததுக கொள்ளுவதறகும, தேவாகளுககும மறறுமுள்ள ரிஷீஸ்வரர்களுக்கும, காளுவாசுரனுலும, அவன தமபி கர லாசுரனுலும் நோநதிருககிற கஷ டஙகளேயும தீர்த்து அவாகளே சம ஹாரம செயது தாமததை நிலே நாட்டுவாரென்று எண்ணி பலவாறுக ஆசி பொழிநதனா

பஞ்சபுடடி, 'இவவுததமனுல் சிவ பெருமானிட்ட காரியததை முடிகக வேணடுமெனறுக கருதி அநத உத்த மன கரத்தைப் பிடிதது இவனுல தான் தாங்கள் அருளிய வஸதிரஙு சிருஷடிகக வேணடும. என்னுல முடியா'தென்று பஞ்சபுடடி தெரி விகக திருமூர்ததிகளும அநத உத தமனுககு பாவநாராயணர் என்று பெயரிட்டு ஆசிாவதித்து 'நீ உன் தமையனுககு நமஸ்கரித்து உனககு முன்னமே ஏறபட்டிருககிற உன் சத துருககளேச சம்ஹாரம் செயய வேண்டும' என்று கூற அதன்படி,

பஞ்சபுடடிக்கு, தமபி பாவநாரா யணன் நமஸ்கரிதது நிற்க, திரு மூாத்திகளும பாவநாராயணரைப பார்த்து 'சீக்கிரம வஸ்திரங்களே சிருஷடித்து தேவா, மானிடர் யாவ ருககும கொடுத்துககொண்டு வாருஙகள. அபபொழுது உஙகள் கீர்த்தி மூவுலகஙகளுககும் பரவும' என்று சொலல அபபடியே செயகி றேமென்று சொல்லித திருமூாததி களுககும, பிரம்ம ரிஷிகள் தேவா கள மற்றும யாகசாலேககு வநதிருக கிறவர்களுக்கும பஞசபுடடியும, பாவநாராயணரும நமஸ்காரம செயது கடைசியில தந்தையாகிய மார்கண்டேயருக்கும், தாய் தூமர வதிதேவிக்கும வணக்கம செலுத்தி, வழிபாடுகள் செயது நிற்கிறபோது, பெற்றோர்கள தங்கள் மைந்தாகளே ஆசீாவதிததருளினா.

பின மக்களிருவரும் தந்தை யரை வணஙகி வஸதிரஙகள் சிருஷ டிகக உபாயம் எனனவென வினவ, பிதாவானவா, 'நீங்கள இருவரும விஷ்ணுவிடம சென்று அவா நாபிக கமலநூலே பெறறுககொணடு சிவ பெருமானிடம சாமபவி எனனும மநதிரததை உபதேசிகக பெற்று வஸதிர நிர்மனம செயயுஙகள்' என்று சொல்ல, பின அவரை வணஙகி ஆசி பெறறு வைகுநதம சென்று நாராயணரைத தொழுது, ''தாஙகள் வஸதிரஙகள் சிருஷடிகக அதற்கான நூலகளும, மநதிரங களும தேவை'' என விணணபபஞ செயய, மகாவிஷ்ணு தன் நாபிக கமலததணடை முறிதது அதிலிருக கின்ற நூல்களே எல்லாம எடுதது மார்கணடேயப புததிரர்களிடத்துக கொடுதது, ''உஙகள் குலததில் பிறந்த புத்திராகள எல்லோரும எனது தாசாகளாகவும, இந்த நூலால அவர்கள் ஜீவிககவும, பதம நூல் என்னிடம் பெற்றமையால் எனக்கேறபட்ட பதமநாபனென்ற நாமததிறகுப பதில் உங்கள குலப புத்திராகளுககுப் பத்மசாலியா களெனனும பெயரிட்டோம''

''உங்கள் குலததில் பிறககின்ற பத்மசாலியாகளெல்லாம விவாகக காலததிலும், கிரகப் பிரவேசக் காலததிலும, கோவிலகளி லும், உறசவக காலஙகளிலும் குலதாம முதலிய சத் கருமஙகள் புரியும காலத்திலும், முதலில பூஜிக கத் தகுந்தவாகள நீஙகளே எப் படியெனறுல், விவாகக் காலததில முககியமாகப புது வஸதிரம வேண டும. விசேக்ஷப புண்ணியக காலததிலும் இராஜாக்கள் முத லானவாகள் நூதன வஸ்திரத்தைக் தரித்துக் கொள்வார்கள் அது போலவே சகல காரியங்களுககும முககியமாகப புது வஸதிரம் வேணடியிருப்பதாலும, யாகாதிக் கிருததியங்கள் நடததுமபோதும, அவை முடிககுமபோதும வேதப் பணடிதாகளுககும், பிதுா சிரார்த் தஙகள் செயயும் ஆசிரியாகட குப் புது வஸ்திரஙகள் கொடுகக வேண்டும. கோவில் கொடி ஏற்றும காலததிலும இன்னும பல யோக காரியஙகள செய யும காலத்தில புது வஸ்திரம இலலாமல செயவதில்லே; ஆதலால் முதலில் பூஜிககத தகுந்தவாகள நீங்களே. ஆதலின இநதப பதம நூல் சாதாரண வெள்ளேயானதால இதறகு வேண்டிய வாணங்களு முணடு. அநத ரகசியததையும் சொலலி சீககிரமாக வஸதிரத்தைச் சிருஷடிததுக கொண்டு வாருங்கள்'' எனறுா

பின் தாங்கள் தொழில் புரிய ஒரு நகரம வேணடுமென விணணபபஞ செயய, விஷ்ணு, ''சகல வசதிகள டஙகிய கனகாத்திரிபுரமென்னும பட்டினத்தை உங்களுககாகவே ஏற கனவே நிர்மாணிக்கப்பட்டுள்ளது'' என்று எடுத்துக கூறிட, பஞ்சபுட் டியும, பாவநாராயணரும் கனகாத் திரிபுரம வந்து அநநகர்வாசிகளால பூஜிககபபெற்று சுபயோக சுபதினத தில் அநதப் படடணததிற்கு அரசா களாகிச சுகமாக நீதியுடன் ஆடசி புரிநது வநதனர்

பின பாவநாராயணர் கைலயங கிரிககுச சென்று சிவனே வணங்கி, வஸதிரஙகள் தயாரிகக சாமபவி எனனும மூலமநதிரத்தை உபதேசித தருள வேணடுமென உரைகக, சிவ னுா உபதேசிதது, ''இதனுல தேவர் களுககும, மானிடர்களுககும வஸ் திரஙகளேச சிருஷடிததுக் கொடுத் தருள வேண்டும'' என உரைகக, அது கேட்டு பின் அவரை வணஙகி விடைபெற்றுக் கனகாத்திரிபபட்ட ணம வந்தடைந்தார்.

ஒரு சுபதினத்தில் மகாவிஷ்ணு விடத்தில் பெற்றுவந்த நூலே சுத்த

மான இடததில வைத்து லக்ஷ்மி நாராயணா உபதேசித்த ரகசியத் தால ஒனபதுவித நிறங்களாலான வஸதிரஙகளை உணடுபணணவும, சிவன் உபதேசிதத சாம்பவி என னும மகாமநதிரததை உசசரிகக அநேக விதஙகளாலான வஸதிரங களை சிருஷடி செயது அந்த வஸதி ரஙகளை மூடடையாகக கடடி யானை, குதிரைகளேறறி வைகுணட மடைநது லக்ஷ்மி நாராயணரைத தரி சிதது வணஙகி, தான் கொணடுவந்த வஸதிரஙகளை, இது பீதாம்பரம், இது லக்ஷ்மி விலாசம, இது சாரதா, இது சந்திரகாநதம, இது சூரியகாந தம, இது சிவபபு வஸதிரம, இது இநதிர நீலம, இது பசசை வஸ்திரம், இது சுபரஜோதி, இது ஆபரமேயம, இது சரஸவதி விலாசம, இது பாா வதி விலாசம,இதுசபை அலஙகரிககும குமப வஸதிரம, இது ரிஷபககொடி, இது ஆஞசனேயக கொடி, குககுடக கொடி, அனனககொடி, இது அககி னிககொடி, ஜலககொடி, மஞசள வஸதிரம, கரக வஸதிரம, ரததின வஸ்திரம், வெள்ளை வஸதிரம, நீல வஸதிரம், கருபபு வஸதிரம, கல யாண வஸதிரம, ஏக வஸதிரம, யாக வேஷடி, போக வேஷடி, பிளளை வேஷடி, தலைப்பாகை எனறு இன் னும எததனையோ விதமான வஸ திரஙகளை ஒவவொன்ருகப பகவா னுக்குக காணபிககப பகவான் பரம சநதோஷம அடைநது ஆசீர் வதிதது, 'இந்த வஸதிரங் களை எப்படி சிருஷடித்தா' யெனறு விஷ்ணு கேடக பாவநாராயணன் சநதோஷமடைந்து, "தாஙகள் கொடுத்த நூலையும ரகசியத்தையும சிவபெருமான் அருளிய சாமபவி எனனும மந்திரததாலும் இவைகளை சிருஷடிததேன்" எனறு சொலலி, "இநத வஸ்திரங்களைத் தாங்கள அணிநதுகொணடு எனககு காக்ஷி தரவேணடும" என்றுபாவநாராயணா மகாவிஷ்ணுவையும், லக்ஷ்மியையும் தணடம சமாப்பித்துக கேட்டுக கொள்ள, அதனபடி லக்ஷ்மி சமேதர ராய மகாவிஷ்ணு கோடி சூரய பிர காசத்துடன் காடசி அளிததார்கள்.

மகாலக்ஷ்மி தனககு ஆடை அளிதத பாவநாராயணருக்குத் தன் வசமிருந்த அமிருத கலசத்திலுள்ள அமுத பானத்தைக கொடுக்க பாவ நாராயணர் அதை வாங்கிப் பானம் பணணின மாத்திரத்தில் பொன்மய மேனியுடைய மனமத சொருபமாக விளஙகினுா "உன கீர்த்தி திரி லோகஙகளிலும பிரகாசிககட்டும, தேவாலயம், பிர்மாலயம், விஷ்ணு வாலயம, சிவாலயம், மடாலயம், முதலிய இடங்களில் நடக்கும் திரு விழாக காலஙகளில கொடியேற்றும் துவஜாரோகண வஸதிரமும உங்கள் குலத்தில பிறநத பத்மசாலியர்கள் கொடுக்கக கடவார்கள்" எனறு பலவாருக மகாவிஷ்ணு எடுத்துச சொலலி, "இனி நீ கைலாசம சென்று பாாவதி பரமசிவனுககும் வஸதிரஙகள் கொடுத்து அவா களின் ஆசியும பெறறு வா" யென்று சொல்ல, பாவநாராயணர் மகா லக்ஷ்மியிடத்திலும், மகாவிஷ்ணு விடததிலும் வணங்கி விடைபெற் றுககொணடு கைலாசததிற்குச சென்று அங்கே சமஸ்த தேவா களும, ரிஷீஸவரர்களும், முனீஸ் வரர்களும, கருட காநதாவ சித்த, விததியாதரா, நந்தி, பிருங்கி, சிவ கணங்களும முதலிய அடியார்களும் ருககப பார்வதி சமேத பரமசிவம் வீறறிருககும சிங்காதனத்தின முன், தாம் இயறறிய வஸ்திர மூட் டையை இறககி வைத்து, "பாாவதி நாதா, பரமபொருளே, கங்காதரா, கருணை வளளலே" என வணஙகிய பாவநாராயணரைப் பாாதது சிவ னுா ஆசீர்வதிததார்.

பாவநாராயணர் தாம் சிருஷ டிதத வஸ்திரஙகளை பரமசிவனுக்கு ரிடபத்துவஜம் எனும வஸ்திரததை யும, பார்வதிக்கு பாாவதி விலாச மென்ற வண்ண வஸ்திரத்தையும, தேவர்களுககும, ரிஷீஸவராாகளுக கும, முனீஸவராாகளுக்கும், சிவ கணஙகளுககும, நந்தி, பிருஙகி மக ரிஷி முதலிய அனைவருக்கும அவர வாகளுககுப பிரியமான வஸதிரங் களைக கொடுத்தாா. எலலோரும் வாஙகி அணிந்துகொண்டாாகள். பரமசிவனுா மாததிரம வஸதிரமணி யாமல் இருபபதைக கண்டு பாவ நாராயணர் கேட்க,"எனக்குப புலித் தோல் அணிய ஆசை ஆகையால், நான் எபபடி இநத ஆடையை அணி வதெ"ன்று பரமசிவனுா சொல்ல, அதறகு பாவநாராயணா, "தங்கள சாமபவி எனற மூல மநதிரத்தை உபதேசித்து சீக்கிரம் வஸ்திரங்களை சிருஷடித்துக்கொண்டு வாருங்கள்" எனறுஎனககுக் கட்டளையிடடு இருப பதும அதனபடியே நான் வஸ்திரங் களை சிருஷடித்துக்கொண்டு வந்து தங்களுக்கும், பாாவதிதேவிக்கும், சபையில் உள்ளவர்கள எல்லோருக் கும் கொடுததேன் ஆகவே நான் சிருஷடித்ததிற்குத் தாங்கள் அன்பு டன அணியத்தான் வேண்டும" என்று சொல்ல அதன்படி சிவனுர் வஸதிரத்தை அணிந்தார்

இப்படியாக ஆடைகள பாவநாரா யணர் மூலமாக உதித்த பத்மசாலிய குல மககளால் அன்றுமுதல் இன்றள வும இத்தொழில் நடைபெற்று வரு கிறது இத்தொழில் இன்று கேவல மாகக் கருதப்படுவதாலும், இக்குல மக்கள் இதனை நம்பி வறுமையில உழலவதினுலும், இனறைய இளைய தலைமுறையினா இதனை விரும்பாமல் வேறு தொழில்களில நாடடம் செலுத்துகின்றனர்.

அத்தகைய தொழில் நசுங்காமல இருககவும், அவாகளுக்குத் தகுந்த ஊதியமும, கௌரவமும அளிததால் நாட்டில் வேலையில்லாத்திண்டாட் டம் குறைவதோடலலாமல், பத்ம சாலிய குலம் மேலும தழைத்து இன்னும பல சிறப்புக்களைச் செயதிடு வா அககுலத்தவாககே தங்களின் பெருமை தெரியாமல் ஏதோ வயிற றுப்பிழைபபுககாகததான் தொழில என்ற கொள்கை ரீதியில் ஒரு இயககமாக செயலபடுகிருர்களே தவிர, இது நமககு இறைவனுல் கிடைக்கப்பெற்ற செயல் எனற புனிதத்துவத்திறகு யாரும் வர விலலை.

ஆகவே இககதையைக் கண்ணு றும பத்மசாலிய குல மககள இனி யாவது அத்தகைய மனநிலையை விடுத்து இது பகவானுககுச்செய்யும் செயலே என நினைத்து, செய்யும தொழிலே தெயவம் என நினைத்து எமபெருமானைத் துதித்து வணங்கி வாழ்க பல்லாண்டு என்று கூறி இக் கட்டுரையை முடிக்கிறேன்.

# ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில், திருமலை

**தினசரி பூஜைகள, ஸர்வதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை**

**சனி, ஞாயிறு, திங்கள் மற்றும செவவாய்க் கிழமைகளில்:**

காலை : 3-00 முதல் 3-30 வரை சுபரபாதம (ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிககெட வாங்கிய நபர்கள் மடடுமே அனுமதிககப்படுவர்).

3-30 முதல 3-45 வரை : சுதத

3-45 முதல 4-30 வரை : தோமால சேவை (அமநதரஞோறசவ கிருஹஸ்தாகள மறறும ரூ100/- டிககெட் வாஙகிய நபர்கள் மட்டுமே அனுமதிககப்படுவர்)

4-30 முதல 4-45 வரை : கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம

4-45 முதல 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை, (அமந்த்ரஞோற்சவ கிருஹஸதாகள் மறறும ரூ 100/- டிககெட் வாஙகிய நபாகள் மடடுமே அனுமதிககபபடுவர்)

5-30 முதல 6-00 வரை : முதலமணி, பலி, சாததுமுறை

6-00 முதல் மதியம 12-00 வரை : **ஸர்வதரிசனம்**

மதியம : 12-00 முதல 1-00 வரை : சுதத்தி, 2வது அர்ச்சனை, (ஏகாநதம) 2வது மணி.

1-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்**

1-00 முதல் 7-00 வரை: கலயாணோற்சவங்கள், ஆர்ஜிதபிரம்மோற்சவங்கள், வாகனசேவைகள் ஊஞ்சலசேவை முதலியன

இரவு 7-00 முதல் 8-00 வரை : சுததி, இரவு கைங்கர்யஙகள், இரவு மணி

8-00 முதல் 10-00 (இரவு) **ஸர்வதரிசனம்**

10-00 முதல் 10-30 வரை : சுத்தி,ஏகாநத சேவைக் கான ஏற்பாடுகள்.

10-30 இரவு : ஏகாநத சேவை (ரூ 50/- டிககெட வாங்கிய நபாகள மட்டுமே அனுமதிக்கபபடுவர்)

**புதன கிழமைகளில் (ஸகஸ்ர கலஸாபிஷேகம் நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுபரபாதம (ரூ 25/- சிறபபு நுழைவு தரிசன டிககெட வாஙகிய நபர்கள மடடுமே அனுமதிககப்படுவர்):

3-30 முதல 3-45 வரை : சுதத்தி முதலியன.

3-45 முதல 4-30 வரை : தோமால சேவை (அமநதரஞோறசவ கிருஹஸதாகள மறறும ரூ 100/- டிககெட வாஙகிய நபாகள மட்டுமே அனுமதிக்கபபடுவா)

4-30 முதல 4-45 வரை : கொலுவு, பஞ்சாஙக ஸ்ரவணம்

4-45 முதல 5-30 வரை : முதல அாசசனை ஸகஸரநாம அாசசனை, (அமநதரஞோற்சவ கிருஹஸ்தர்கள மறறும ரூ. 100/- டிககெட வாங்கிய நபாகள் மடடுமேஅனுமதிககபபடுவர்)

5-30 முதல் 6-00 வரை : முதல மணி, பலி, சாததுமுறை மற்றும ஸகஸ்ரகலஸாபிஷேகத்திறகான ஏற்பாடுகள்:

6-00 முதல் 8-00 வரை : ஆர்ஜித ஸகஸ்ர கலஸாபிஷேகம், சுததி, 2வது அர்ச்சனை 2வது மணி;

8-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்.**

மதியம் : 1-00 முதல மாலை 7-00 வரை: ஆாஜித கல்யாணோறசவஙகள், ஆர்ஜிதபிரமமோறசவங்கள வாகன சேவைகள், ஊஞசல சேவைகள் முதலியன,

இரவு : 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு, கைங்கர்யஙகள், இரவு மணி முதலியன

8-00 முதல இரவு 10-00 வரை **ஸர்வதரிசனம்.**

10-00 முதல் 10-30 வரை : சுததி,ஏகாநதசேவைக் கான ஏறபாடுகள.

10-30 இரவு : ஏகாந்தசேவை (ரூ. 50/- டிககெட வாஙகிய நபர்கள மடடுமே அனுமதிககபபடுவா)

**வியாழக் கிழமைகளில் (ஆர்ஜித திருபபாவாடை, நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுபரபாதம (ரூ. 25/- சிறபபு நுழைவு தரிசன டிக்கெட வாங்கிய நபாகள் மட்டுமே அனுமதிககபபடுவர்).

3-30 முதல 4-30 வரை : நிதய கட்டளை கைங் கர்யஙகள் அதாவது சுததி, தோமால, அாசசனை முதல்மணி மறறும் அபிஷேகததிறகானஏற்பாடுகள.

4-30 முதல் 6-00 வரை : அபிஷேகம

6-00 முதல் 7-30 வரை : மூலவருககு சமர்பபணை

7-30 முதல் 9-00 வரை : தோமால சேவை, அாச்சனை 2-வதுமணி, பலி,சாததுமுறை முதலியன

9-00 முதல் இரவு 6-00 வரை : **ஸர்வதரிசனம்**

மதியம் 1-00 முதல மாலை 7-00 வரை : ஆர்ஜித கல்யாணோறசவம, பிரம்மோற்சவங்கள், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் மற்றும் மற்றைய ஆர்ஜித சேவைகள

இரவு7 -00 முதல இரவு 8-00 வரை : சுத்தி, இரவு கைங்காயஙகள், மறறும இரவு மணி

8-00 முதல நடுஇரவு10-00 வரை : **ஸர்வதரிசனம்**

10-00 முதல 10-30 வரை : சுததி, ஏகாநதசேவைக் கான ஏறபாடுகள்:

10-30 இரவு : ஏகாநதசேவை (ரூ 50/- டிககெட வாஙகிய நபாகள் மடடுமே அனுமதிககபபடுவா)

**வெள்ளிக் கிழமைகளில (அபிஷேகம நடைபெறுவதால்)**

3-00 முதல் 3-30 வரை : சுபரபாதம (ரூ 25/- சிறபபு நுழைவு தரிசன டிககெட வாங்கிய நபாகள மடடுமே அனுமதிககபபடுவர் )

3-30 முதல 5-00 வரை : சாலிமபு, சுததி, கைங் காயஙகள், காலை மணி, அபிஷேகததிற்கான ஏறபாடுகள்.

5-00 முதல 6-30 வரை : அபிஷேகம்

6-30 முதல 8-00 வரை : சமாபபணை

8-00 முதல் 9-00 வரை : தோமால சேவை, அர்ச்சனை (தனி)

9-00 முதல இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்**

இரவு 7-00 முதல 8-00 வரை : சுததி, இரவு கைஙகர்யங்கள், மணி, முதலியன;

8-00 முதல் இரவு 10-00 வரை **ஸர்வதரிசனம்**

10-00 முதல் 10-30 வரை : சுததி,

10-30 ஏகாந்தசேவை (ஆர்ஜிதம ரூ. 50/- டிககெட வாஙகிய நபாகள் மட்டுமே அனுமதிககபபடுவர்.)

அபிராமி அம்மைப் பதிகத்தில் ஒரு பாடல் நமக்குத் தேவையான பதினாறு வேண்டுதல்களை அம்மையின் முன் வைத்து அருள் செய்ய வேண்டுமெனப் பாடுகிறார் அபிராமி பட்டர்

முதலில் நமக்குத் தேவையானது கல்வி. அந்தக் கல்வியும் நிலையாக இருக்க வேண்டும். அப்பொழுது தான் நாம் கற்றபடி நிற்க முடியும். ஒரு பிறவியில் நாம் கற்கின்ற கல்வி அந்தப் பிறவியோடு போய் விடுவதில்லை. அடுத்தடுத்து வருகின்ற பல பிறவிகளிலும் நம் உயிருக்குத் துணையாக வந்து பயன் தரவல்லது என்பதைத்தான் திருவள்ளுவரும்,

'ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப் புடைத்து''

என்று குறிப்பிடுகிறார். அந்தக் கலையாத கல்வி நமக்குக் கட்டாயம் வேண்டும்.

"கல்வி கரையில கற்பவர் நாள்சில" என்று கூறுகிறது நாலடியார். கல்வியோ பரந்து விரிந்து கரை அற்றதாக இருக்கின்றது. அதைக் கற்கின்ற நாமோ குறைந்த வயது டையவர்களாக இருக்கிறோம். எனவே நிறைந்த கல்வியைக் கற்பதற்கு நமக்கு வயதும் மிகுதியாக வேண்டும். ஒரு குழந்தை பிறந்து வளர்கிறது என்றால் அதற்கென்று விதிக்கப்பட்டுள்ள வயது நாள்தோறும் குறைந்து கொண்டே வருகிறது என்பதுதான் உண்மை. எனவே அப்படிக் குறையாத வயதும் நமக்கு வேண்டும்.

முகத்தளவில் நட்பு கொள்ளாமல் மனம் ஒன்றி நட்பு கொள்வதே சிறந்தது என்று சொல்வார்கள். உள்ளம் ஒன்றி நட்பு கொண்டால் தான் நண்பர்கள் ஒருவரோடு ஒருவர் கள்ளம் கபடம் இன்றிப் பழக முடியும். உள் ஒன்று வைத்துப் புறம் ஒன்று பேசாமல் இருக்க முடியும். உள்ளும் புறமும் ஒத்துப் பழகுகின்ற நட்பே சிறந்த நட்பாகும். அத்தகைய கபடம் இல்லாத நட்பும் நமக்கு வேண்டும்.

வருவாய்க்குத் தகுந்தாற் போல் அமைவது நம் வாழ்க்கை. வருகின்ற வருவாயும் கறை அற்றதாக-குறையில்லாததாக இருக்க வேண்டும். எப்படியும் பொருளீட்டி வாழலாம் என்று எண்ணாமல் நல்ல வழியிலேயே பொருளீட்ட வேண்டும். அப்படி ஈட்டுகின்ற பொருளைக் கொண்டே வாழ்க்கையில் வளம் சேர்க்க வேண்டும். அத்தகைய கறையில்லாத வளமையும் நமக்கு வேண்டும்

காற்று அடிக்கின்ற போது பழுத்த பழங்கள்தாம் கீழே விழும் என்று இல்லை. பழுக்காத நிலையில் உள்ள காய்களும் பிஞ்சுகளும்கூட விழுந்து விடுகின்றன. அதுபோலவே வயது முதிர்ந்தவர்கள் தாம் இறந்து விடுகிறார்கள் என்று இல்லை. வயது முதிராத இளைஞர்களும் சிறுவர்களும்கூட மறைந்துவிடுகிறார்கள். இதனையே

'' முற்றியிருந்த கனியொழியத் தீவளியால்
நற்காய் உதிர்தலும் உண்டு''

எனகிறது நாலடியார் நாம் இளமையோடு இருக்கின்ற வரைதான் நம் கடமைகளைச் சரிவரச் செய்ய இயலும். உடல் முதுமை அடைய நேர்ந்தாலும் உள்ளத்தை இளமையோடு வைத்திருக்க நாம் கற்றுக் கொள்ள வேண்டும். என்றென்றும் இளமையோடு இருக்கின்ற நிலை நமக்கு வேண்டும் குன்றாத இளமையும் நமக்கு வேண்டும்.

"நோய் அற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்" என்பது பழமொழி

"நோய் அற்ற வாழ்வில் நான் வாழ வேண்டும்" என்று பாடுகிறார் வள்ளற்பெருமான். நோய் அற்று இருப்பதே முதல் இன்பமாகும். அத்தகைய உடலில் இருக்கும் உள்ளம் தான் இளமையோடு இருக்க முடியும் அந்த நோயற்ற வாழ்வும்-பிணியில்லாத உடலும் நமக்கு வேண்டும்.

மனம் ஒரு குரங்கு போன்றது. அது நம்மை ஆட்டி வைக்கின்ற வழியெல்லாம் நாம் ஆடாமல் இருக்க வேண்டும். எத்தகைய நல்ல செயல்களைச் செய்கின்ற போதும் மனதிற்குச் சலிப்பு ஏற்படுவது இயல்பு அந்தச் சலிப்பு ஏற்படாமல் இருக்கின்ற வகையில் நாம் நம் மனதை வைத்துக் கொள்ள வேண்டும் சலிப்பு கொள்ளாத மனமும் நமக்கு வேண்டும்.

ஒருவருக்கு மனைவி வந்து வாய்ப்பதும் குரு வந்து வாய்ப்பதும் அவருடைய தலை விதியைப் பொறுத்தது என்று சொல்கிறது ஒரு பழமொழி. ''தாரமும் குருவும் தலை விதி என்ப''

# வேண்டுதல் பதினாறு

திரு நீ. தங்கவேலன்-வேலூர்.

நல்ல மனைவி வந்து வாய்ப்பதும் நல்ல குரு வந்து வாய்ப்பதும் அவ்வளவு எளிதானதல்ல என்பதையே இந்தப் பழமொழி சொல்கிறது. அன்புள்ள மனைவிதான் தன் கணவனைக் கண்ணே போல போற்றுவாள், அவன் சொல்லை மீறி நடவாமல் இருப்பாள், தன் நெஞ்சில் அவனுக்கு இடம் கொடுத்து அவனைத் தெய்வமாக வழிபடுவாள். தன்

சுகத்தையும் நலததையும் பெரிதாக எண்ணுமல் கணவனுடைய சுகத்தை யும் நலததையுமே கருதி வாழவாள். அத்தகைய மனைவி ஒருவனுக்கு வாயத்துவிட்டால் அவனிடம வேறு எனன இலலையென்ருலும எல்லாம இருப்பது போலதான அதறகு மாருக மாணபில்லாத மனைவி ஒருவனுககு வநதுவிட்டால் அவனுடைய வாழ்வில் எலலாம இருந்தும ஒன றும் இல்லாதது போலத்தான் என் பார் திருவள்ளுவா.

'' இலலதென இல்லவள மாண்பானுல
உளளதென
இல்லவள் மாணுக் கடை.''

எனவே மாண்புளள — அன்புள்ள மனைவியும் நமக்கு வேண்டும்

நல்ல மனைவி நமக்கு அமைவதோடு நல்ல மககட்பேறும் நமக்கு வேண்டும் மக்கள் என்ருல பெறறோரின சொல்லைத் தட்டாதவாகளாக இருக்க வேண்டும். பெற்றோாக்கு அடங்கி நடபபவாகளாக இருக்க வேணடும. நல்ல அறிவும் பண்பும் உடையவாகளாக இருக்க வேணடும. "இபபடிபபட்ட மககளைப் பெற இவர்களின் பெற்ருேர் என்ன தவம் செயதாாகளோ?'' என்று பிறா பாராட்டுகின்ற வகையில மககள் இருகக வேணடும். அததகைய சிறந்த மககட்பேறும நமககு வேண டும

இந்த உலகத்தில் அழியாமல இருப்பது புகழ ஒன்றுதான் அந்தப் புகழைப பெருமல இருபபவர்கள் வாழந்தும் வாழாதவாகளே! ஒருவருககு வருகினற புகழ அவருடைய நல்ல செயலகளால மேன்மேலும உயர்நது விளஙகுவதாக இருக்க வேண்டும முதலில் நல்ல புகழைப் பெற்றுப் பின்னா அது தாழந்து போகின்ற வகையில் நாம வாழக் கூடாது. தாழாத கீர்த்தியும நமககு வேண்டும.

சொன்ன சொல தவருமல் அதன் படி நடபபவனே மனிதன் எனறு கொள்ளத் தகுநதவன் ஆவான். அதற்கு மாருக நடபபவன் மனித உருவத்தில் நடமாடினுலும் அவனை மனிதன என்று சொலவதற்கு இல்லை எததகைய நிலையிலும தன்னுடைய சொலலைத் தவருமல் நடபபதே-ஒரு கோடி பெறும தகுதியுடையது என் பாா ஔவையாா.

'' கோடானு கோடி கொடுபபினும தன்
னுடைநாக்
கோடாமை கோடி யுறும''

சொன்ன சொல மாருமல் வாழ கின்ற வாழ்வும நமக்கு வேணடும.

புகழுககு அடிபபடையாக இருப பவைகளில் கொடையும ஒன்று பிறருக்கு உதவி செயகின்ற அநதக் கொடைக் குணமே ஒருவருடைய புகழை மேன்மேலும உயரச செய் யும. பிறருக்கு நாம ஒன்றைக கொடுககின்றபோது அதனைச சிலா தடுககவும் கூடும. மனைவி மககள், நணபர்கள் ஆகியோரின மூலமாக நம்முடைய கொடைககுச சில தடைகள் வரலாம. அத்தகைய தடைகள் வராத கொடையே சிறந்தது. அந்தக் கொடைப் பணபும—ஈகின்ற குணமும் நமககு வேண்டும.

ஒரு நாடகக கொட்டகைககோ திரை அரங்கத்திற்கோ ஒவ்வொரு வராகத்தான வநது சேருவார்கள். ஆனுல் அநத நாடகமோ திரைப் படமோ முடிந்த உடன் மக்கள் அனை வரும் ஒரே நேரத்தில் வெளியே போய விடுகிறாாகள். அதனைப போனறதுதான செலவமும்; வருகினறபோது கொஞசம் கொஞசமாக வநது சேரும. ஆனுல போகின்ற போது ஒரே நேரததில் அடியோடு போய விடும் என்று கூறுகிறது திருக்குறள்.

'' கூத்தாட(டு) அவைக்குழாத் தறறே
பெருஞ்செல்வம்
போக்கும் அதுவிளிந் தறறு''

## திருபபதியில தங்கு வசதி காட்டேஜுகளின கட்டண விவரங்கள் (நாள ஒன்றிற்கு)

**ஸ்ரீவேங்கடேஸவரா தர்ம சத்திரம் :**

| | |
|---|---|
| இரணடு படுககைகளைக கொணடு மேசை நாற காலி வசதிகளைக கொணட அறை: | ரூ. 20-00 |
| நானகு படுககைகளைக கொணடு மேசை நாற காலி வசதிகளைக கொணட அறை: | ரூ 25-00 |
| ஒரு படுககையும், மேசை நாறகாலி வசதிகளைக கொண்ட அறை | ரூ 15-00 |

**ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி .**

| | |
|---|---|
| இரணடு படுககைகளையும, குளிாசசாதனம, மேசைநாறகாலி வசதிகளைக கொணட அறை. | ரூ. 50-00 |
| ஒரு படுக்கையும குளிாசசாதனம மற்றும மேசை நாறகாலி வசதிகளைக கொணட அறை. | ரூ. 30-00 |

**ஸ்ரீ வேங்கடேஸ்வரா விருந்தினர் விடுதி**

| | |
|---|---|
| இரண்டு படுககைகளைக கொணடு மேசை நாற காலி வசதிகளைக கொண்ட அறை: | ரூ. 20-00 |

னவே தொலைந்து போகும நிலை யுடையது பொருள். பொருள் தொலைநது போகாமல் நமமிடம இருந்தால்தான் பல நல்ல செயல களைச் செயய முடியும ஆகவே தொலையாத நிதியும நமக்கு வேண டும

உலகததிறகு மழை இலலாமல இருபபது எவவளவு கொடுமையோ அவவளவு கொடுமையானது மக் களுககு இரககமுள்ள நலல ஆடசி இல்லாமல் இருபபது: ஒரு நாடடில் கொடுங்கோல ஆடசி நடை பெறு மாயின் அநத நாட்டில் மழைகூடப பெயயாமல் போயவிடும. நீதி முறைபபடி நல்ல ஆடசி நடை பெறும நாடடில் பருவ மழையும நிறைந்த விளைசசலும் ஒரு சேர ஏற் படும என்றெலலாம் சொல்கிறது திருககுறள்

'துளியினமை ஞாலத்திற(கு) எற்
றறறே வேந்தன
அளியினமை வாழும் உயிர்க்கு''
''முறைகோடி மன்னவன செய்யின
உறைகோடி
ஒலலாது வானம பெயல்''
''இயலபுளிக் கோலோச்சும மனனவன
நாடட
பெயலும விளையுளும் தொக்கு''

அத்தகைய நல்லாடசியும் நாம வாழகின்ற நாடடில் இருக்க வேண் டும கோணுத செஙகோல் இருகக வேணடும.

துனபம இல்லாமல் வாழகின்ற வாழக்கையைத்தான் எல்லோரும விருமபுவார்கள், எலலா உயிாகளும விரும்பும நாம துன்பம இல்லாமல் வாழவதோடு பிறருககு—பிற உயிா களுககுத் துன்பம் செயயாமல் வாழ வேணடும. அப்பொழுதுதான துன பம் இல்லாத இன்ப வாழவு நமககு அமைய முடியும். இனபமே நிறைநத துன்பமே இலலாத சிறந்த வாழவும நமக்கு வேணடும்.

இவறறிற்கெலலாம மேலாக இறை வன் திருவடிகளில நமககு அனபும இருக்க வேண்டும. இறைவனிடம் அன்பு இல்லாத—இறையுணர்வு இல் லாத வாழவால் பயனே இலலை நாம வாழகின்ற வாழககை பயன உள்ள தாக இருகக வேண்டின் இறை உணா வோடு—இயறகை நெறியில் வாழ பவர்களாக நாம் இருகக வேண்டும்.

''அலை கடலின் நடுவே அறிதுயில கொண்டிருக்கும திருமாலின் தங கையே! ஆதிகடவூரில் வாழகின்ற தெயவமே! ஈசனின் ஒரு பாகத்தில அகலாமல இருககின்ற சக்தியே! அருள செயயும் அபிராமியே!

அழிந்து போகாத கலவி, குறைந்து போகாத வயது, கபடு இலலாத நடபு, கன்றுதல் இலலாத வளமை, குன்றுதல் இலலாத இளமை, பிணியில்லாத உடல், சலிபபு இலலாத மனம், அன்பு அக லாத மனைவி, தவறுத மககடபேறு, தாழாத புகழ, மாறுத சொல், தடை கள வராத கொடை, தொலையாத நிதி, கோணுதல் இலலாத செங் கோல், துன்பம இல்லாத வாழ்வு, தூயமையான உன் திருவடிகளில் அன்பு—ஆகிய இந்தபபதினறு வேணடு தல்களையும் கொடுத்தருளி உன் தொண்டர்களோடு என்னையும் சேர்த்துக கொள்வாய!'' என்று அழ காகப பாடுகிறுர் அபிராமி பட்டர்

கலையாத கல்வியும குறையாத வயது
மோர் கபடு வாராத நட்பும்
கனறுத வளமையும் குனறுத இள
மையும கழுபிணி இலாத உடலும்
சலியாத மனமும்அன் பகலாத மனைவி
யும் தவறுத சந்தானமும்
தாழாத கீர்த்தியும மாறுத வார்த்
தையும தடைகள வாராத
கொடையும
தொலையாத நிதியமும் கோணுத
கோலுமொரு துன்பம் இல்லாத
வாழ்வும்
துய்யநின் பாதத்தில் அன்பும்
உதவிப பெரிய தொண்டரொடு
கூடடு கண்டாய்!
அலையாழி அறிதுயிலும் மாயனது
தங்கையே!
ஆதி கடவூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம அகலாத
சுகபாணி அருள்வாமி அபிராமியே!

★

## ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி கோயில், திருப்பதி.

| ஆாஜித சேவைகள | கடடணம | நேரம் |
|---|---|---|
| 1. அபிஷேகம | ரூ 1/- நபர் ஒருவர்கரு | காலை 9-30 முதல் 10-00 வரை |
| 2. ஸகஸ்ரநாமா அர்ச்சனை | ரூ 1/- நபா ஒருவர்கரு | மாலை 5-00 முதல் 6-00 வரை |

**பிரஸாத கட்டண விவரங்கள்**

| | | | |
|---|---|---|---|
| 1) | புளியோதரை | — | ரூ. 50-00 |
| 2) | பொஙகல | — | ரூ. 55-00 |
| 3) | ததயோதனம் | — | ரூ. 40-00 |
| 4) | சர்க்கரைப் பொங்கல் | | ரூ. 65-00 |
| 5) | தோசை | — | ரூ. 35-00 |
| 6) | வீரா | — | ரூ. 155-00 |
| 7) | கேஸரிபாத் | — | ரூ. 85-00 |

# வைணவ வினா - விடை

விதவான ஸ்ரீ. உ. வே. தஞ்சை என். எஸ். தாதாசாாயா.

**அக்கினி புராணம சிறபபு அம்சம என்ன?**

அககினி பகவான வசிஷடருக்குக கூறுவதாக அமைநதது. "கேள்வி—பதில" வகையில உரை நடையில் புராணங்களின் தோறறம பறறிக கூறப பட்டுளளது உலகபபடைப்பு - பெருமாளின் அவ தார ரகசியங்கள் — விஷ்ணு பூஜை - மந்திரஙகளின பெருமை-முததிரை லக்ஷணங்கள - தீக்ஷை - அககினி கொண்டு நடத்தப்படும சடஙகுகள் - தர்பபையின லக்ஷணம, வகைகள் — தேவாலயங்களில் மனிதாகள் நடநது கொள்ளவேண்டிய கடமைகள் - பெருமாள் ஆலயஙகளில துவாதசாராதனம என்ற வைதிகப பெயரில் நடக்கும் பவிதரோதஸவம - சாளககிராம லக்ஷணம், வழிபாடு - ஆலயங்களில விககரகப பரதிஷடை - மாடுகளின் சிகித்சை - சாநதிகள - சிததர்களின் பெருமை - நரகவர்ணனம - யோக சாஸதிரம - எனபன விளககபபடடுளளன

**பவிஷய புராணம் விவரம என்ன?**

1 முதல் 5 பாவஙகள் உள்ளவை. பிரமன் தேவ ரிஷிகளுககுக் கூறியது. சூரியனைப பறறிய கதை - புத்தகம், எழுத்து — பேசசாளா, எழுததாளாகள் இவாகளின் தன்மை இலக்கணஙகள - சைவம, வைஷ ணவம், ஸௌர மதஙகளின் விளக்கம் - பிரமனின பெருமை - தர்மம, அர்த்தம், காமம், மோக்ஷம், சிவன், விஷ்ணு, சூரியன இவாகளின தனிப்பெருமை முதலியன விளககபபடடுள்ளன

**பிரமம வைவாத்தபுராணம பற்றிய குறிபபு என்ன?**

இதில 4 கண்டஙகள உளளன அவைகள பரமமகண்டம, பரகிருதிகண்டம, கணேசகண்டம, ஸ்ரீ கிருஷ்ணஜன்மகணடம என்பனவாகும். இநதப புராணம பிரமன நாரதருககுக கூறியதாக அமைந தது. ஸூத பௌராணிகருககும ரிஷிகளுககும் உரையாடலே இநதப புராணம எனவும கூறுவ துணடு. சிவலோகம, சிவலோகததின் கதி, சிவ ஞானம, கிருஷ்ணன பெருமை-கலிகளைப பறறிய சிறப்பு, பிள்ளையாரைப பறறிய சிறபபு, பரசுராமர் கதை, விஷககடிகள், அவை பற்றிய மருத்துவம், கிருஷ்ணலீலை, ராஸக்கிரீடை, கோகுலம, கமஸ வதம முதலிய விஷயங்கள உள்ளன. இதைப படிப பவாகளுககு நிசசயம் பிரமலோகம கிடைக்கும் என வும பயன் கூறபபட்டுள்ளது.

**லிங்கபுராண விளக்கம என்ன?**

இதனை எலலாப புராணங்களின சாரம நிரமபி யுளளதெனபா இதில முறபகுதி-பிறபகுதி என இருபகுதிகள உண்டு வநநிலிஙகோதபவரான சிவ பெருமானே கூறிய புராணம். உலகத தோற்றம், சிவலிங்க லக்ஷணம—பூஜை முறை—ததீசி சரித்திரம— நான்கு யுகஙகளின தாமஙகள்—புவனகோசம—சநதிர மண்டலம்—சூாய மண்டலம்—லிஙகப பிரதிஷடை— சிவ விரதஙகள்—பிராயச சித்தங்கள்—"அரிஷடம" என்ற கொடிய தோஷம—காசி, ஸ்ரீசைவ க்ஷேததிர மாகாதமியம—வராகாவதார சரிதம—நரசிம்மாவதார சரிதம—ஜலநதர சரிதம, சிவ ஸஹஸரநாமம—தக்ஷ யாகம — விஞயகாகயானம — நாடடியம, நிருத்யம் இவைகளின லக்ஷணங்கள—உபமனயுவின் கதை— விஷ்ணுவின் பெருமை—சநத்குமார நநதீ சம்வாதம்— சிவ மாகாதமியம—அகோர வீரபததிர சரிதம— காயத்ரீ மகிமை முதலியன உரைககபபடடுள்ளன இந்தப புராணம உடனே சிவ ஸாயுஜயம தரவல லது.

**வராகபுராணம் சிறபபு என்ன?**

இதில் பூாவ பாகம, உததரபாகம் என்ற இரு பிரிவுகள உளளன விஷ்ணுவின பெருமை கூறப பட்டுளளது வராகபபெருமாளுக்கும ஸ்ரீ பூமா தேவிக்கும உரையாடலாக விளககம அமைநதது மகாதபஸின் கதை—கௌரியின் தோறறம்—விநய கா—நாகங்கள் — சுபபிரமணியன — ஆதிதயன்—குபே ரன — விருஷ — இவர்களின் சிறபபு. அகஸதிய கீதை—ருததிர கீதை—மஹிஷாசுரவதம—32 அபரா தஙகள—அவைகளுககுப பராயசசிததம — மதுரை நகர வருணனை—சிராததததின் பெருமை—யமலோக வருணனை—விஷ்ணு விரதஙகள் — கோகாணமாகாத மியம்—புஷ்கர மாகாதமயம்—முதலியன கூறப்பட டுள்ளன மாலைகளைத தாமே பிரிததுக கட்டிச சூடடுதல், அவா புகழை இனிமையான பாடடில இசைத்துப் பாடுதல் இவவிரணடும் எனக்கு மிக மிக விருப்பமானது எனத திருமாலே பூமாதேவியிடம் ரகசியமாக உரைதத விவரம இதில முககியமானது.

(தொடரும்)

நம்முடைய முதாதையர்களின் அளவு கடந்த அறிவாற்றலுக்கு எல்லையே கிடையாது என்பதைத் திட்டவட்டமாக, உறுதியாகக் கூறலாம். அதற்கு எடுத்துக்காட்டாக ஒன்றல்ல, ஓராயிரம் வேண்டுமானாலும் கூறலாம்.

வானசாஸ்திரப் பேரறிஞராகவும், கோள வினைகளைக் கணித்துக் கூறும் சோதிடமாமேதையாகவும், ப்ருஹத்-ஸம்ஹிதை போனற கிடைத்தற்கரிய ஜ்யோதிஷ ஆராயச்சி நூல்களை இயற்றியவருமாகத்திகழ்ந்த வராஹமிஹரர் "கேது" வைப்பற்றிக்கூறும் போது, சுபாசுபங்களை உணர்த்தும் உற்பாதங்களின நிழலே"கேதுக்கள்". க்ரஹத்துக்குரிய அந்தஸ்து இந்தச் சாயைகளுக்கிடையாது ஒரு நபரின் நடமாட்டத்துக்கு முன்னதாகவே, அவரின் நிழல் எபபடித் தரையில் படர்ந்து இருப்பனவற்றுக்குச் லேசானதொரு இருட்டடிப்பை விளைவிக்கின்றதோ அதைப் போன்றதொரு நிழலே "கேது" எனப்படும். கேது எனப்படுவதும் ஒனறல்ல அவை எண்ணிலடங்காதவை. கணிதத்தினால் கேதுக்களின் ஸ்தானங்களை துல்லியமாக அறிந்து கொள்வது சிரமசாத்யமான, முடியாத ஒன்றாகும். சூாய சநத்ர க்ரஹண சம்பவம் அவைகளின மேல் படரும் ராகு-கேது எனற நிழல்களின் தடுப்பே ஆகும. வேண்டுமானால் இவற்றை "சாயா க்ரஹங்கள்" என்று கூறிக்கொள்ளலாம் என்கிறார்.

ஸம்ஹிதைகளை ஆராயச்சி செயயும் போது "கேதுக்களை" ஆயிரர் ஆவார்கள் என்று தெரிகிறது 116 கேதுக்கள் ம்ருத்யுவினுடைய ஸவாசத்திலிருநதும், எழுவர் ப்ரம்மனிடமிருநதும, 15 கேதுக்கள் ஔத்தாலகி என்ற மகரிஷிபிடமிருந்தும, பதினெழுவர் மரீசிகச்யபரின நெற்றியிலிருந்தும் தோனறினர் என்று ஒரு தகவல் தெரிவிக்கிறது.

மற்ரெரு நூல், ஐந்து கேதுக்கள் ப்ரஜாபதியின் உடன் பிறந்தோர் எனறும், மூன்று கேதுக்கள் அக்னியின் குமாரர்களாக, புகை வடிவில் தோன்றினார்கள் எனறும், பதினைவர் சமுத்திரத்தைக் கடையும்போது உண்டானார்கள் என்றும், ஒருவர் பிரம்மாவுக்கு ஒரு சமயம் ஏற்பட்ட கோபஜ்வாலையில் உறபத்தியானவர் என்றும் தெரிவிக்கிறது. மற்ரெரு ஸ்லோகத்தில் "கேதுக்களுக்கு நமஸ்காரம்' எனப்பன்மையில் கேதுக்கள் விளிக்கப்பெறுவதும் குறிப்பிட வேண்டிய ஒன்றாகும்

# கேது

பழம நூல்களில் மஹாகேது, ஸவேத கேது, தூமகேது, சாயாகேது ஜவாலாகேது எனறு பல்வேறுபெயர்கள் பல சந்தர்பபங்களில் காணக் கிடைக்கின்றன.

சூர்யன் தனது பணியைச் செய்ய விடாமல் அவனது ஒளி, பரபஞ்சமெங்கும் விழாதவண்ணம் தன நிழலின் ஆகிருதியை தன்னுடைய அசாத்ய வரபரசாத பலத்தினால் பயங்கரமாக மேலும் மேலும் வளர்த்துக் கொண்டு அருவேறுதயத்திலிருந்து சூர்யப்ரகாசத்தைத் தடுத்து க்ரஹித்து இருட் நிழலை எங்கும் படரவிட்ட ஸவர்பானுகேது என்ற அரக்கனின அட்டகாசத்தைத் தாஙக முடியாத பாலகரன மஹாவிஷ்ணுவிடம் முறையிட ஸ்ரீமந்நாராயணன் விளையாட்டாக அரககனின் சிரம் வேறு, உடல் வேறுகச் சிதைக்க, வெட்டுண்ட உடறபகுதி, பாரதத்தின தெனபகுதியில் பொதிகை மலைச்சாரலில் விழ, அது விழ்ந்த இடத்துக்கு அருகாமையில் வசித்த ஜைமினி என்ற அந்தணன் அந்த உடலை தர்ப்பைப்புற்கள் பரப்பிய படுக்கையில் கிடத்தி, துடிக்கும் உடல் சாந்திபெற, இரவு பகலாக அதனருகே அமர்ந்து நாராயண காயத்ரி மஹா மந்த்ரத்தை ஜபிக்க, அந்த உடலின் துடிப்பு மெதுமெதுவாய் அடங்கி, தலைப்பகுதியில் படத்துடன் மூன்று பாம்பின் சிரங்கள் முளைத்து எழ, அந்த விநோதப் பிறவியைத் தன் மகனாகவே ஸ்வீகாரம் செய்துகொண்டு, விஷ்ணு காயத்ரி மஹா மந்த்ரத்தை உபதேசம் செயது, அதையே ஸமரித்துக் கொண்டிருக்குமாறு கூற, அந்த உருவும் அந்த மஹா மந்த்ர விசேஷத்தால் திருமாலின் அனுக்ரஹம் பெறறு சாயாக்ரஹபதம்பெற்று "செம்பாம்பு" வடிவத்துடன் சிறப்படைந்ததாக "விஷ்ணு தர்மோத்ரம்" கூறுகிறது.

ஜைமினியின் ஸவீகாரபுத்ரனான படியால் "கேது" ஜைமினி கோத்ரத்தைச் சேர்ந்தவரானார். கேதுவின் வெட்டுண்ட உடல், ஜைமினியால் தர்ப்பைபபபடுக்கையில் இடப்பெற்று பாதுகாக்கப்பட்டதால் கேதுவின் ப்ரியத்துககு அங்கீகரிக்கப்பெற்ற சமித்தாக "தர்பபையே" ஆனது.

கேது விஷ்ணுகாயத்ரி மஹா மந்த்ர உபதேசத்தை ஜைமினியிடமிருந்து வடமேற்கு திசை பார்த்து பெற்றதால் கேதுவின திக்கு வடமேற்கு. தன உருவம் சிதைந்து மாறுபட்ட தோற்றம் உண்டானதற்குக் காரணமான "சூர்யன்" கேதுவுக்குப பகைக்ரஹம். தனது பகைவனான சூரியனுக்குப பகைவனாகிய "சனி"யைத் தன் நண்பனாக ஏற்றுக்கொண்டவன் இந்தக்கேது. ('பகைவனுக்குப பகைவன் நண்பன்') அதனாலேயே சனியின் வீடாகிய கும்பத்தை தனது உச்சவீடாக வரித்துக் கொண்டவன. சனி க்ஷேத்ரமாகிய கும்பம் கேதுவுக்கு உச்சஸ்தான

ஜோதிஷ விசாரதை
வி பிச்சையம்மாள்
பாண்டிச்சேரி-3

காரணத்தில் சூர்யனுக்கு உரிய சிமம் கேதுவை நீசப்படுத்துகிறது. சூரியக்ரஹண காலத்தில், ஸ்பர்ச சமயத்துக்கு முன்னதாக வீட்டில் உள்ள உணவுப்பொருள்களிலெல்லாம் தர்ப்பையைக் கிள்ளி இடும் வழக்கம் பல இல்லங்களில் இன்றளவும் காலங்காலமாக இருந்துவருவதை நாம் பார்க்கலாம். இதற்குக்காரணம் சூர்யக்ரஹணத்துக்கும் கேதுவுக்கும் சம்பந்தமிருப்பதாக நம் முன்னோர்கள் கருதியதாலும், இதன் விளைவாக உணவுப்பண்டங்கள் க்ரஹணகாலத்தில் விஷமாகிவிடுவதை "கேதுவின் சமித்தாகிய தர்ப்பை" தடுக்கும் என்பதாலுமே.

இந்தச்செயல் ஏதோ புராணகால மூடநம்பிக்கை என்று பலரால் கூறப்பட்டது. ஆனால் சில வருஷங்களுக்கு முன்னால் ஏற்பட்ட பூர்ண சூர்யக்ரஹணத்தின்போது அதை ஆராய்ச்சி செய்வதற்காக, பூர்ண சூரியகிரஹணம் தெரிகின்ற பிரதேசங்களில் இந்தியா முக்யமானது என்று, இங்கு உலகின் அனைத்துப் பகுதிகளைச் சேர்ந்த விஞ்ஞானிகளும், வானியல் ஆராய்ச்சியாளர்களும் க்ரஹண சமயத்தில் ஏற்படுகின்ற மாற்றங்களையும், உடலியற்கோளாறுகளையும், கடல் அலைகளின் எழுச்சிமாற்றத்தையும், க்ரஹண காலத்தில் நம் இந்தியமக்கள் அநுஷ்டிக்கின்ற பழக்கவழக்கங்கள் அதாவது க்ரஹணஸ்பர்சம் தொடங்குவதற்கு ஒன்பதுமணி நேரத்துக்கு முன்பாகவே உணவு உண்ணுதலை முடித்துக்கொள்ளுதல், உணவுபபண்டங்களில் எல்லாம் தர்ப்பை இடுதல்; க்ரஹணம் முடிந்ததும் சமுத்ரம், ஆறு, குளம் போன்ற நீர்நிலைகளில் தலைமுழுகுதல் இப்படி எல்லாவற்றையும் மிக நுணுக்கமாக ஆராய்ந்து அறிக்கைவிட்டனர். அவற்றில் ஒவவொருபழக்கமும் விஞ்ஞான அறிவியில் கூற்றுப்படி ஏற்றனுசரிக்க வேண்டிய செயல்களாகவே இருபபது பாரத நாட்டு முதாதையர்களின் மிகச் சிறந்த விஞ்ஞான அறிவுக்கூர்மைக்கு சான்று பகர்வனவாக இருபபதாகக் கூறியுள்ளனர். அந்த அறிக்கை தந்த தகவல்களில் ஒன்று -"சூர்யக்ரஹண சமயத்தில்பல பிராமணர்கள் தங்கள் வீட்டின உணவுபபொருளகளில் பால், தயிர், மோர், அனனம், நெய போன்றவற்றில் "தர்பபை' என்ற ஒருவித புல்லை இட்டிருந்தனர். இந்த தர்ப்பை இட்டபொருளகள எலலாம் கிரஹணத்துக்குப பினபும நன்றாகவே இருநதன ஆனால் அம்மாதிரி இடபபெறாத பொருளகளைபபரிசோதித்தபோது கிரஹணகாலத்துக்கு பிறகு அவை decompose ஆகியும், அமிலதன்மை அடைந்தும், புளிததும் லேசான விஷத்தனமையடைந்தும கெட்டும் போயிருப்பதும் பிரமிபபைத்தரும் புதிய கணடுப்பிடிபபாக இருந்தது"

அறிக்கையின் மற்றொரு குறிபபு -

"கிரஹணத்துக்கு சுமார் ஒனபது மணி நேரத்துக்கு முன்பே, தங்கள் உணவை முடித்துக்கொள்ளும் பழக்கம் இந்தியாவின எல்லாபபகுதிகளிலும் பரவலாகக் காணபபடுகிறது. இது பற்றி ஆராய்ச்சி பூர்வமான அணுகு முறையை மேற்கொண்டபோது கிரஹணசமயத்துக்கு முனபே அவர்கள் உண்டவை நனகு செரிமானமாகி, ஏறக்குறைய க்ரஹண காலத்தில் அவர்கள பட்டினிநிலையிலேயே இருந்தனர். அவர்களின உடல் ஆரோக்யத்தில் எவவித பாதிபபும் காணப்படவில்லை. மாறாக அவர்கள் முன்பைவிட சுறுசுறுபபாகவும், அதிக உணவை உட்கொள்பவராகவும் காணபபட்டனர் அதேசமயம், க்ரஹணகாலத்தில் உணவு எடுததுக்கொண்டவர்களைச் சோதித்ததில், அஜீர்ணம், flatulence, dyspepsia, Gastro intestinal troubles, acidity போன்ற கோளாறுகள் புதிதாகத்தோன்றி இருப்பதைக் கண்டுபிடிக்க நேர்ந்தது".

ஜாதக ரீதியாக ஒருவருக்கு லக்னத்துககு பனனிரண்டாம் வீட்டில் "கேது" அமர்ந்து, அந்த கேதுவுக்கு ஆட்சி அல்லது உசசம்பெறற "சுக்ரன" பார்வை கிடைத்தால் அவருக்கு அந்த ஜெனமம்தான கடைசி பிறவியாக இருககும அதற்குபபிறகு அவருக்குபபிறபபு கிடையாது அவர் இந்தபபிறவியிலேயே பல ஆலயங்களுக்கு ஸம்பரோக்ஷண கும்பாபிஷேக மங்கலஙகள நடைபெற மூலகாரண மனிதராக விளஙகுவார். க்ஷேத்ராடனம, சித்த புருஷஙகளின ஆசீர்வாதபலம, தான தாதாவாக விளங்கும வாய்ப்பு அனைத்தையும் "கேது" வழஙகுவான

"கேது"வின மஹாமநத்ரம் பரம்மாண்டபுராணத்தில் கூறபபெற்றுள்ளது அதை குரு முகமாக உபதேசம் பெற்று, மந்த்ர சித்திபெற்றுவிட்டால், அவரின வாககுக்கு விஷஜந்துக்கள் அடிபணியும அவரை துக்கங்கள் நெருங்காது அவருக்கு அகால அபமிருத்யு தோஷம கிடையாது. எல்லா ஞானமும, அவர் படிக்காத பாமரனாகவே இருந்தாலும்கூட தாமே சென்று அடையும். வைகுந்த ப்ரவேசம் அவரின ஜீவாத்மாவுக்கு பிரமாணிக்கபட்டதாகிறது.

" தூம்ரவர்ணம் த்விஜாகாரம்
கதாவரகரத்வயம்
சித்ராம்பரதரம கேதும்
சித்ரகந்தானுலேபனம்
வைடூர்யாபரணம் சைவவைடூர்ய
மகுடோஜ்வலம
சித்ரம கபோதமாருஹயமேரும்
யாந்தமதக்ஷிணம்
கேதும் கராள வதனம் சித்ரவர்ணம்
க்ரீடினம்
பரணமாமி ஸதாதேவம்
த்விஜாகாரம க்ரஹேஸ்வரம்"

ஓம் கேதவே நம'

★

# மங்கையாரும் ரங்கநாதனும்

வண்டுகள் ரீங்கரித்துக் கொண்டி ,கின்றன திரும்பிய இடமெங் ,ம புஷ்பங்கள் என்றால், வண்டுகள் ங்கரிப்பதில் என்ன அதிசயம்? வித ]தமான புஷ்பங்கள் ஜாதி, முல்லை, ]த்தியமல்லிகை, குண்டு மல்லிகை ாதவி என்று வெள்ளை புஷ்பங்கள் லாந்து, மயக்கும் மாலைப்பொழுதை ,கிழ்ச்சியோடு வரவேற்கின்றன.

திருமங்கையாழ்வார், இவற்றை யல்லாம் கண்டுகளித்துக்கொண்டே ருகிறார் இந்தஊர பரிமளரங்கனை ஸவிக்க வேண்டுமென மிக ஆவலாக ]ருந்தபடியால், இந்தஊருக்கு ஆழ் ார் எழுந்தருளியிருக்கிறார்

ஆயிற்று. திருக்கோவிலும் வந்து ]ட்டது. புஷ்கரணியில் இறங்கி ]ராடுகிறார். பின்னர், பன்னிரு திரு ாமங்களையும் உச்சரித்துக்கொண்டே ]ருமண்காப்பும் அணிகிறார் பகவத் ம்பந்தமும், பாகவத ஸம்பந்தமும், ]பற்றிருப்பதனால், தேஜஸ்வீக்கிறது ]னுஷ்டானங்களை முடித்துக் ]காண்டு, கோயிலுக்குள் வருகை ]லே இருட்டியே விட்டது.

''அடாடா! மிகவும் நேரமாகி ]ட்டதே .. '' என்றபடியே த்வஜ ]தம்பத்தை ஸேவித்துக்கொண்டு ]ள்ளே வருகையில், திரை இறங்கி ]ட்டனர்.

''இந்த ஊர ஜமீன்தார் விசேஷ ஆராதனைகள் நடத்துகிறார் இன்று ]தனால அவர் குடும்பத்துக்கு மட் ]ம் இப்போது விசேஷ ஸேவை. அது ]டிந்த பின்புதான், பொது ] ஸேவை. தர்ம ஸேவை ..'' ]ன்று ஒரு ஸ்ரீவைஷ்ணவர், ஆழ்வா ]டம் தணிந்த குரலில் கூறுகிறார்.

''அப்படியா!'' என்ற ஆழ்வார், ]துவரை ஸஹஸ்ரநாம பாராயணம் செய்யலாமே என்று ஒரு பக்கமாக அமர்கிறார் கண்களை மூடிக்கொண்டு மனத்திற்குள்ளேயே பாராயணம் ஆரம்பமாகிறது

ஒவ்வொரு திருநாமத்தைச் சொல் லும் போதும், அந்த நாமத்தின் அர்த்த விசேஷங்களுடன், எம்பெரு மானமனக்கண்ணிலே ஸேவைஸாதிக் கிறான். மெய் மறந்து ஸேவித்து முடித்தவர், கண் திறந்து பார்க்கிறார் திருப்தியுடன

ஆ! இதென்ன விபரீதம்! கூட்ட மும் கலைந்து விட்டிருக்கிறது. தர்ம ஸேவையும் முடிந்து விட்டதா என்ன!

ஓடுகிறார் ஆழ்வார், ஸன்னதியை நோக்கி.

திருக்காப்பை சாத்திக்கொண்டு, பட்டர் வருகிறார்.

''ஸ்வாமி! பெருமாளை ஸேவிக்க வெகு தூரத்திலிருந்து வந்திருக்கி றேன '

''க்ஷமிக்கணும் நாழியாகிவிட்டது. .. உஷத்கால ஆராதனையை ஸேவி யுங்கள் . '' விறுவிறு வரிசை யாகப் பூட்டிக்கொண்டு வருகிறார், பட்டர்.

உள்ளத்திலே ஏமாற்றமும் சோர் வும் சேர்ந்து கண்களிலே நீரை வர வழைக்கிறது. நைந்துபோய உட் கார்ந்து விடுகிறார், ஆழ்வார்.

கல்லும் கரையும் வகையில், எம் பெருமானை அழைக்கிறார்.

''ஆழ்வீர்! ஆழ்வீர்!''-என்ற குரல் கேட்கிறது. நிமிர்ந்து பார்க்கிறார். சாக்ஷாத் எம்பெருமானே ஸேவை ஸாதிக்கிறான்.

''ஆழ்வீர்! என்னை இவ்வளவு நிர்ப் பந்தப் படுத்துகிறீரே! ப்ரஹ்லாதாழ் வாளைப் பற்றி உமக்குத் தெரியு மன்றோ? எனக்கு விளக்கிக் கூறும்''!

''ப்ரஹ்லாதாழ்வாளைப் பற்றி இப் போது என்ன?''

''எனக்கு உம்முடைய வியாக்கி யானம் இப்போது வேண்டியிருக் கிறதே!''

ஆழ்வார் தொண்டையைக் கனைத் துக் கொண்டார். கையைக் கூப்பிக் கொண்டு, கணீரென்று பாசுரம் பாட லானார்

'' தீ எம்பெருமான் நீர் எம்பெருமான்
திசையும் இரு நிலனும்
ஆய் எம்பெருமான் ஆகின்றன் நின்
அடியோம் காணும் ஆள்
தாய் எம்பெருமான் தந்தை தந்தை
ஆவீர் அடியோமுக்கே
எம்பெருமான் அல்லீரோ நீர்
இந்தளூரீரே.''

---

திருமதி மைதிலி வேணுகோபால்

---

''எம்பெருமானே! ஸர்வ பூதாத் மகே தாத! ஜகந்நாதே, ஜகத்மதி, பரமாத்மதி கோவிந்தா! என்று கண் ணால் காண்பதெல்லாம் எம்பெரு மான் என்றார் தானும் அவனே, துரும்பும அவனே என்றார். அதை அடியொற்றியேதான் நானும் இப் பாசுரத்தைப பாடினேன்.''

அவரது கைகளைப் பிடித்துக் கொண்ட எம்பெருமான், 'உங்கள் பாசுரத்தை வைத்தே உங்களை கேட் கிறேன, தேஜஸ் தத்துவத்துக்கும் ஜலத்துக்கும், திசை, பூமிகளுக்கும் அந்தர்யாமி நான் என்றீர் - இல் லையா?'' என்றார்.

'ஆம்!'

'பின்னே, நீரும் பரஹ்லாதனைப் போனறே, நீரிலும் நெருப்பிலும் என்னைக் கண்டு மனம் களித்திருக்கலாமே! எதற்காக அர்ச்சையில் ஸேவை ஸாதிக்கும்படி நிர்ப்பந்திக்கிறீர்?'

ஆழ்வாரை வென்று விட்டோம் என்று எண்ணிய எம்பெருமான், வெற்றிப் புன்னகையோடு, ஆழ்வாரின் பதிலுக்காகக் காத்திருந்தான்.

'அது சரி, அடியேன் போல்வார், ப்ரஹ்லாதனுடைய கோஷ்டியில் எங்ஙனம் சேர முடியும்? சாதாரண நீரிலும், நிலத்திலும் நீ இருக்கிறாய் என்று திருப்தியடைய மாட்டோம். நீரும் நீயே, நெருப்பும் நீயே என்று வைத்துக் கொள்கிறோம். ஆனால், அது மட்டும் என் போல்வருக்குப் போதாது. இந்த சாதாரண ரூபங்கள் போதாது, அஸாதாரண திவ்ய மங்கள விக்ரஹ வேஷத்தைக் கண்டு களிக்க ஆவலாக இருக்கையில், இந்த ஜகத்ஸ்வரூபம் எங்ஙனம் திருப்தியளிக்கும்?''

நீளமாகப் பேசி நிறுத்தினார் ஆழ்வார்.

'உம், அப்புறம்?' - என்று கேட்டான் எம்பெருமான்.

'பரவாஸு தேவனாக நீ ஸேவை ஸாதிப்பது நித்ய ஸூரிகளுக்காக; வ்யூஹமோ, தேவர்களின் குறை களைக் கேட்டறிய, விபவங்களோ, அந்தந்த காலத்து மானிடர்களுக்காக, அந்தர்யாமித்வமோ, ப்ரஹ்லாதன் போன்றோருக்காக, இல்லையா? இவை ஒன்றிலும் சேராது, ஸம்ஸாரிகளாய இருப்போர்க்கு என்ன செய்யப் போகிறாய்? மற்றெல்லாமே, நன்றாகக் காண முடிந்தோருக்குத் தானே! ஸம்ஸாரிகளான குருடர்க்கு என்ன செய்வதாய உத்தேசித்திருக்கிறாய்?'

எம்பெருமான் பதிலேதும் பேச முடியாது நின்றான்

'அர்ச்சாவதாரத்துக்கு எத்தனையோ மஹிமைகள் உண்டு. ஸகல கல்யாண குணங்களும் நிரம்பியது. பாவியைக் கூட பாவனனுக்கும் சக்தி இந்த அர்ச்சைக்கு உண்டே! சொல்லவே முடியாத பெருமை வாய்ந்தது அர்ச்சை'

'ஆழ்வீர்! என்னை வென்றுவிட்டீர்! என்னை வென்றுவிட்டீர்'' என்றபடியே மறைந்தான் பெருமான்.

ஆழ்வார் திகைத்து நின்றுவிட்டார். எம்பெருமான் மறைந்து போனானே சரியான பதில் ஏதும் கூறாமல்?

திடீரென்று கதவுகள் 'படார் படார்' எனத் திறந்து கொண்டன. நிறுத்தியிருந்த தீபங்கள் எல்லாம் வழக்கத்தைவிட ஒளியைப் பிரகாசித்துக் கொண்டு எரிந்தன. சாம்பிராணி ஊதுவத்திகளின் மணமும், பெருமானுக்கு சாத்தியிருக்கும் திருமண் காப்பின் கர்ப்பூர வாசனையும், புஷ்பங்களின் வாசனையும் மூக்கைத் துளைத்தன. கண்டாநாதம் கணீர் என்று எழ, 'ஆழ்வாரே! அர்ச்சையிலே நீவிர் கொண்டுள்ள ஈடுபாட்டை அறிந்து, மனம் மிகவும் மகிழ்கிறேன். நீவிர் விரும்பியபடி, பரிமள ரங்கனாக ஸேவை ஸாதிக்கிறேன். கண்டுகளியும்' என்றான் எம்பெருமான்

'ஆஹா! என்னே உன் கருணை! இந்தளூரீர்! எந்தாய்! நும்மைத் தொழுவோம் நும்தம் பணி செய்திருக்கும் நும் அடியோம். சிந்தை தன்னுள் நீங்காது இருக்கும் திருவே! மருவ இனிய மைந்தா! அம்தண் ஆலி மாலே! சோலை மழகளிறே! இம்மைக்கு இன்பம் பெற்றேன், பெற்றேன், இம்மைக்கு இன்பம் பெற்றேன்!' என்று பரவசமாகி ஆனந்தக் கூத்தாடினார், திருமங்கையாழ்வார்.

என்ன செய்வதென்று புரியாமல், பாடினார், ஓடினார், விழுந்தார், எழுந்தார் மயங்கிச் சாய்ந்து விட்டார், ஆழ்வார். எத்தனை நாழிகை கழிந்ததோ தெரியவில்லை

உஷத் காலத்தே, கோயில் பட்டர் வந்து தோளை உலுக்கிய பின்னர் தான், உணர்வு பெற்று எழுந்தார். மெள்ள மெள்ள நடந்ததெல்லாம் நினைவுக்கு வந்தது. கனவுலகில் நடக்கிறவர் போல, நடந்து சென்றார். நீராடி ஸ்நானம் செய்து, மறுபடியும் எம்பெருமானின் அர்ச்சைத் திருமேனியை ஸேவிக்க வேண்டும் என்று திருவுள்ளம் கொண்டார்

வழக்கத்தைவிட, கோயில், தேஜஸ் பெற்றிருப்பது போலத் தோன்றியது, பட்டருக்கு ''பூக்களும் வாடவேயில்லை. ஊதுவத்தி சாம்பிராணியின் பரிமளமும், எங்கோ இழுத்துச் செல்வது போலத் தோன்றுகிறதே! என்ன காரணமாயிருக்கும்'' என்று பட்டர் யோசித்துக்கொண்டே, ஆராதனைகளுக்கு ஏற்பாடுகள் செய்தார்

பரிமளரங்கனோ, பக்தனிடம் தோற்ற ஸந்தோஷத்தோடு, பக்தனின் கோரிக்கையை நிறைவேற்றிய திருப்தியோடு, ஸேவை ஸாதித்தான



## அறிவிப்பு

ஸப்தகிரிக்கென்று ஒரு வருடம் அல்லது அதற்கு மேற்பட்ட காலத்திற்கு அனுப்பப்படும் சந்தாத் தொகை மட்டுமே ஏற்றுக்கொள்ளப்படும். ஒரு வருடத்திற்கும் குறைவான கால அளவுக்காக அனுப்பப்படும் சந்தாத் தொகை ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது.

ஆண்டுச் சந்தா ரூ 12/-

# ◦ கார்த்திகை மாத நோன்பு ◦

கார்த்திகை மாதம் என்றால் ஆச்வின மாத (ஐப்பசி) சுக்லபக்ஷ ஏகாதசி ஆரம்பித்து கார்த்திகை மாத சுக்ல ஏகாதசி முடிய 'इषस्य शुक्लैकादश्यां यावत्बोधिनी भवेत्' என்று பாத்ம புராணம் கூறுகிறது. அதாவது ஐப்பசி மாத சுக்ல பக்ஷ ஏகாதசியிலிருந்து கார்த்திகை மாத சுக்ல பக்ஷ ஏகாதசி முடிய என்பதாகும். கார்த்திகை மாத சுக்ல பக்ஷ ஏகாதசிக்கு உத்தான கைசிகி ஏகாதசி என்று பெயர். இந்த ஒரு மாத காலத்தில் விடியற் காலையில் எழுந்து ஸ்நானம் செய்தால் புண்ணியமாகும்.

'कार्तिके मासि ये नित्य तुलास्थे दिवाकरे।
प्रात स्नास्यन्ति ते मुक्ता महापातकिनोऽपि च ॥

स्नान जागरण दीप तुलसीवनपालनम् ।
विष्णो· पूजां च ये कुर्युः जीवन्मुक्तास्तु ते नरा ॥
(பாத்ம-பு-அ-2-12)

கார்த்திகை மாதத்திலும், ஐப்பசி மாதத்திலும் காலையில் எழுந்து ஸ்நானம் செய்தால் மஹாபாதகத்திலிருந்தும் விடுபடலாம். ஸ்நானம், விழித்துக் கொண்டிருப்பது, தீப தானம், துளசிவனத்தைக் காப்பாற்றுவது, விஷ்ணுவைப் பூஜிப்பது முதலியவைகளைச் செய்தால் அவன் ஜீவன் முக்தனாகிறான் என்று கூறப்பட்டுள்ளது.

கார்த்திகை மாதத்திற்கும், ஏகாதசி விரதத்திற்கும் அவ்வளவு மேன்மை எப்படி வந்தது என்று ஸத்யபாமை ஸ்ரீகிருஷ்ணனைக் கேட்க, கிருஷ்ணன் கூறுகிறார்.

முன்னொரு காலத்தில் சமுத்திர ராஜனுக்கு சங்கன் என்று ஒரு பிள்ளை இருந்தான். அவன் மிகவும் கொடுமையானவன். ஆகையால் தேவர்களுடன் யுத்தம் செய்து அவர்களை விரட்டிவிட்டு தேவலோகத்தைக் கைப்பற்றிக் கொண்டான். தேவர்கள் தங்கள் குடும்பத்துடன் மேரு மலையிலுள்ள குகைகளில் தங்கினார்கள். இவ்விபரம் அறிந்த சங்கன் மேருமலைக்குச் சென்று பார்த்தான். தேவர்கள் அங்கே மகிழ்ச்சியாகவும், பலசாலிகளாகவும் இருக்கிறார்கள் என்றறிந்தான். உடனே சங்கன் வேதங்களைத் திருட முயற்சித்தான். சங்கனின் எண்ணத்தை அறிந்த தேவர்கள், வேதங்களை சமுத்திரத்தில் மறைத்து வைத்துவிட்டார்கள். சங்கன் இவ்விபரத்தையறிந்து சமுத்திரத்தில் மூழ்கித் தேடலானான்.

பிரம்மாதி தேவர்கள் ஸ்ரீமந் நாராயணனைத் துதித்து விழிப்பட்டார்கள். நாராயணன் தோன்றி என்னவென்று கேட்க தேவர்கள் நடந்ததைக் கூறினார்கள். அதற்கு நாராயணன் 'நான் சமுத்திரத்தில் மூழ்கி அந்த சங்கனை ஸம்ஹரித்து வருகிறேன், கவலைப்படாதீர்கள் சென்று வாருங்கள்' என்று கூறினான். நாராயணன் கடலில் மூழ்கிய மாதமே கார்த்திகை மாதம்.

'ப்ரத்யப்தம் கார்திகே மாஸி
விச்ரமந்த்யப்ஸு ஸர்வதா |
காலே அஸ்மின் யே ப்ரகுர்வந்தி
ப்ராத: ஸ்நாநம் நரோத்தமா
தே தேஹாந்தே த்வயா சக்ர ப்ராப்ய
மத்புவனம் ததா'

ஒவ்வொரு கார்த்திகை மாதத்தில் நான் தண்ணீரில் வசித்து வருகிறேன். இந்நாட்களில் எவரொருவன் ஸ்நானம் செய்கிறானோ, அவனை என் உலகிற்கு அனுப்பிவை, ஹே இந்திரனே' என்று கூறினார். இவ்விதம் கூறி நாராயணன் சிறிய மீன் உருவம் எடுத்து விந்த்ய மலையில் கச்யபர் அர்க்யம் கொடுக்கும்போது அவர் கையில் விழுந்தார்.

इत्युक्त्वा भगवान् विष्णुः शफरीतुल्यरूपधृत्।
ययौ तदाञ्जलौ विन्ध्यवासिनः कश्यपस्य सः ॥

'இத்யுக்த்வா பகவான் விஷ்ணு:
சபரீதுல்யரூபத்ருத் ।
யயௌ ததாஞ்ஜலௌ விந்த்ய
வாஸின: கச்யபஸ்ய ஸ: ॥'

கச்யபர் அந்த மீனை தன் கமண்டலுவில் போட்டார். அந்த மீன் பெரிய உருவங்கொண்டது. அதை எடுத்து கிணற்றில் போட்டார். கிணற்றில் போட்டவுடன் முன்னை விட பெரிதாகிவிட்டது. அதை எடுத்து குளத்தில் போட்டார். அங்கேயும் மிகவும் பெரிதாகி விட்டது, உடனே அதை எடுத்து ஸமுத்திரத்தில் விட்டார். ஸமுத்திரத்தில் விழுந்த மீன் உருவமான விஷ்ணு சங்கனைத் தேடிப் பிடித்துக் கொன்று அவனை எடுத்துக் கொண்டு பதரீவனம் அடைந்தார்.

स तं कमण्डलौ क्षिप्र कृपया क्षिप्तवान् मुनिः।
तावत् न स ममौ तत्र ततः कूपे न्यवेशयत् ॥
तत्रापि न ममौ तावत् कासारं प्रापयत् स तम्।
एवं स सागरे क्षिप्तस्तत्र सोऽपि व्यवर्धत ॥
ततोऽवधीत् स तं शङ्खं विष्णुर्मत्स्यस्वरूपधृक्।
अथ तं स्वकरे धृत्वा बदरीवनमागमत् ॥

'ஸ தம் கமண்டலௌ க்ஷிப்ரம் க்ரு
பயா க்ஷிப்தவான் முனி:
தாவத் ந ஸ மமௌ தத்ர தத:
கூபே ந்யவேசயத்
தத்ராபி ந மமௌ தாவத் காஸாரம
ப்ராபயத் ஸ தம ॥
ஏவம் ஸ ஸாகரே க்ஷிப்தஸ் தத்ர
ஸோபி வ்யவர்த்த |
ததோ அவதீத் ஸ தம் சங்கம் விஷ்
ணுர்மத்ஸ்ய ஸ்வரூபத்ருக் ॥
அத தம் ஸ்வகரே த்ருத்வா பதரீவன
மாகமத் |

டாக்டர் டி ஜி. அனந்தசுப்ரமணியன்,
திருப்பதி.

பதரிவனத்தில் தேவர்களும், முனிவர்களும் கூடி விட்டார்கள்; நாராயணன் தேவர்களைப் பார்த்தும் ரிஷிகளைப் பார்த்தும், 'ஹே! ரிஷிகளே! நான் சங்கனைக் கொன்று அவனை எடுத்து வந்து விட்டேன். நீங்கள் சென்று வேதங்களைத் தேடிப பிடித்துஎடுத்து வாருங்கள்' என்றார்.

உடனே எல்லோரும் சென்று கடலில் வேதங்களைத் தேடிப் பிடித்து வர, அவ் வேதங்கள் அவரவர்களின் பெயர்களிலேயே வழங்கப்பட்டன.

उद्धृताश्च सबीजास्ते वेदा यज्ञसमन्विताः।
तेषु यावन्मितं येन लब्धं तावद्धि तस्य तत् ॥
स स एव ऋषिर्जातस्तदा प्रभृति पार्थिव ॥

' உத்பூதாச்ச ஸபீஜாஸ்தே வேதா
யக்ஞஸமன்விதா ।
தேஷு யாவன்மிதம் யேனலப்தம
தாவத்தி தஸ்யதத் ॥
ஸ ஸ ஏவம் ருஷிர்ஜாதஸ் ததாபர
ப்ருதி பார்த்திவ ॥

எல்லோரும் பிரயாகை என்ற இடத்தை அடைந்தார்கள். பிரம்மாவோடு, நாராயணனும் வநது சேர்ந்தார். பிரம்மா வேதங்களைக் கண்டவுடன் மகிழ்ச்சியடைந்து வேதங்களில் கூறபபட்ட யாகங்களைச் செய்லானார். ஆகையால் இநத இடம் 'பிரம்ம க்ஷேத்ரம்' என்றபெயர்பெறட்டும் என்று ஸ்ரீமந் நாராயணன் அறிவித்தார். மேலும் கூறினார். "ஹே! தேவர்களே!! சூரிய வம்சத்தில் பிறந்த பகீரதன என்ற அரசன் தன் தவசக்தியால் கங்கையை இந்த இடத்திற்குக் கொண்டு வரபபோகிறான. அத்துடன் ஸூரியனின பெண்ணான யமுனையும் கங்கையுடன சேரப போகிறாள்"

सूर्यवंशोद्भवो राजा गङ्गामत्रानयिष्यति ।
सूर्यस्य कन्यया चात्र कालिन्द्या योगमेष्यति ॥

' ஸூர்ய வம்சோத்பவோ ராஜா கங்
காமத் ராநயிஷ்யதி ।
ஸூர்யஸ்ய கன்யயா சாத்ர காளிந்த்யா
யோகமேஷ்யதி ॥

என்று கூறி 'நீங்கள் எல்லோரும் இங்கேயே எப்பொழுதும் ஸாந்நித்யமாக இருங்கள் இந்த க்ஷேத்ரத்தில் யார் ஒருவர்,

दानं तपो व्रतं होमः जपपूजादिकाः क्रियाः ।
अनन्तफलदाः सन्तु मत्सान्निध्यकराः सदा ॥

' தானம் தபோ வ்ரதம் ஹோம ஜப
பூஜாதிகா: க்ரியா ।
அனந்த பலதா: ஸந்து மத்ஸாந்
நித்யகரா ஸதா ' ॥

தானம், தவம், விரதம், ஹோமம், ஜபம் பூஜை முதலானவைகளைச் செயகிறாரோ அவருக்கு எல்லாவித மான நற்பயன்களும் கிட்டும் என்று கூறினார்.

பிரயாகையின பெருமை,

' பரம்ம ஹத்யாதிபாபாநி
பஹு ஜன்ம கிருதான்யபி ।
தர்சனாத்தஸ்ய தீர்த்தஸ்ய
விநாசமயாந்தி தத்க்ஷணாத் ॥
தேஹத்யாகம் ச யே தீரா
குர்வந்தி மம ஸந்நிதௌ ।
பித்ருனுத்திச்ய யே ச்ராத்தம்
குர்வந்த்யத்ர ஸமாகதா ॥
தேஷாம் பித்ருகண ஸர்வே யாந்தி
மத்ஸமருபதாம் ।

என்று கூறபபட்டுள்ளது.

இதே மாதிரி மகர ஸங்க்ராநதிக்குப பின (மாசி மாதத்தில) காலையில் நதிகளில் ஸ்நாநம செயதால் அவர்களின் பாபங்கள நீஙகுகின்றன. ஸ்நானம செயத பின துளசியையும், நெலலி மரத்தையும பூஜை செயய வேண்டும்; இவவிரண்டுமே ஸ்ரீமந் நாராயணனுககு முக்கியமானவை. துளசியின பெருமையை பாத்ம புராணம் கூறுகிறது.

" துளசிகானனம ராஜந்
க்ருஹே யஸ்யாவதிஷ்டதே ।
தத்க்ருஹம் தீர்த்தருபம்ச
நாயாந்தி யமகிங்கரா: ।
ஸர்வபாபஹரம புண்யம்
காமதம் துளசீவனம்
ரோபயந்தி நரச்ரேஷ்டா
தே நபச்யந்தி பாஸ்கரீம் ।
தர்சனே நர்மதாயாஸ்து
கங்காஸ் நாநம் ததைவ ச
துளசீ வனஸம்ஸர்கம் ச
ஸமமேதத் த்ரயம் ஸ்ம்ருதம் ।
ரோபணாத் பாலனாத் ஸேகாத்
தர்சனாத் ஸ்பர்சநாத் ந்ருணாம் ।
துளசீ மஞ்ஜரீபிர்ய
குர்யாத்ஹரிஹரார்சனம் ।
ந ஸ கர்பக்ருஹம் யாதி
முக்திபாக் ந ஸம்சய. ॥

துளசிச் செடிகள் எந்த வீட்டில் இருக்கிறதோ அங்கே யமபயம் கிடையாது மேலும் ஸாவ ஸௌபாக்யங்களும் உண்டாகும் நர்மதை நதியின தரிசனமும், கங்கையில் ஸ்நானமும, துளசியின் சேர்க்கையும் பல வித பலன்களையுடையதாகும். துளசிச் செடிகளை வளாப்பதாலும், தண்ணீர் விடுவதாலும், காபபாற்றுவதாலும், பார்பபதாலும், ஸ்பர்சிபபதாலும் மனிதர்களுககு நன்மை ஏற்படும். துளசிக் கொத்துக்களால் விஷ்ணுவையோ, சிவனையோ பூஜித்தால் அவனுக்கு மறுபிறவி கிடையாது, மோக்ஷமும் கிடைக்கும்.'

இதே போல் நெல்லி மரத்திற்கும் பெருமையுண்டு.

धात्रीछायासु यः कुर्यात् पिण्डदानं नृपोत्तम।
तृप्तिं प्रयान्ति पितरस्तस्य ये नरके स्थिताः॥
धात्रीफलविमिश्रैस्तु तुलसीदलमिश्रितैः।
जलं स्नाति नरस्तस्य गङ्गास्नानफलं स्मृतम् ॥

" தாத்ரீ சாயாஸு ய குர்யாத் பிண்ட
தானம் நிருபோத்தம
திருபதிம் பிரயாந்தி பிதர: தஸ்ய யே
நரகே ஸ்திதா ।
தாத்ரீ பலவிமிச்ரைஸ்து துளசிதள
மிச்ரிதை
ஜலே. ஸ்நாதி நரஸ்தஸ்ய கங்காஸ்
நாநபலம் ஸம்ருதம் ।

நெல்லி மரத்தினடியில் எவனொரு பித்ருகளுககுச செயய வேண்டிய கடனகளைச் செயகிறானோ, அவனுடைய பித்ருக்கள் நரகத்தில் இருந்தால் கூட திருபதியடைகிறார்கள.

நெலலிககாயச்சாறுடனும், துளசிச் சாறுடனும கலந்த தண்ணீரில் எவனொருவன் ஸநாநம் செய்கிறானோ

அவன் கங்கா ஸநாந பலனைப் பெறு வான்.

तीर्थानि, मुनयो, देवा यज्ञा: सर्वेऽपि कार्तिके।
नित्यं धात्रीं समाश्रित्य तिष्ठन्त्यर्के तुलाश्रिते॥

"தீர்த்தானி, முனயோ, தேவா, யக்
ஞா, ஸர்வேபிகார்திகே |
நித்யம் தாத்ரீம ஸமாச்ரித்ய திஷடந்
த்யர்கே துலாச்ரிதே ||

சூரியன் துலா மாதத்தில் இருக் கிற கார்த்திகை மாதத்தில் தீர்த் தங்கள், முனிவர்கள், தேவர்கள், யாகங்கள் முதலியவைகள் நெல்லி மரத்தை அடைந்து இருக்கிறார்கள்.

द्वादश्यां तुलसीपत्रं धात्रीपत्रं तु कार्तिके।
लुनाति स नरो गच्छेन्निरयानतिगर्हितान्॥

" துவாதச்யாம் துளஸிபத்ரம் தாத்ரீ
பத்ரம்து கார்த்திகே |
லுநாதி ஸ நரோ கச்சேந்நிரயான
திகர்ஹிதான் ||

எவனொருவன துவாதசியில் துளசி யையும், கார்த்திகை மாதத்தில் நெல்லி இலையையும பறிக்கிறானோ அவன் பயங்கரமான நரகத்தை யடைவான.

धात्रीच्छायां समाश्रित्य
कार्तिकेऽन्नं भुनक्ति यः।
अन्नसंसर्गजं पापं आवर्षं तस्य नश्यति॥
धात्रीमूले तु यो विष्णुं कार्तिके पूजयेन्नरः।
विष्णुक्षेत्रेषु सर्वेषु पूजितस्तेन सर्वदा॥

" தாத்ரீச்சாயாம் ஸமாச்ரித்ய கார்திகே
அன்னம் புனக்திய |
அன்ன ஸம்ஸர்கஜம் பாபம ஆவர்ஷம்
தஸய நச்யதி ||
தாத்ரீமூலே துயோ விஷ்ணும கார்
திகே பூஜயேந்நர. |
விஷ்ணு! க்ஷேத்ரேஷு ஸர்வேஷு
பூஜிதஸ்தேன ஸர்வதா ||

நெல்லி மர நிழலில் எவனொருவன் உணவு உண்ணுகிறானோ அவனுக்கு அந்த உணவினால் ஏற்படும தோஷங் கள் விலகி எப்பொழுதும் அன்ன தோஷம் இல்லாமல் இருப்பான.

அதே போல் நெல்லி மரத்தடியில் எவனொருவன கார்திகை மாதத்தில் விஷ்ணுவை பூஜிக்கிறானோ! அவன் எல்லா க்ஷேத்ரத்திலுள்ள விஷ்ணுவை பூஜித்த பலனை அடைவான் என்று கூறப்பட்டுள்ளது பத்ம புராணத்தில். மேலும் உதாஹரணமாக ஒரு கதை யும் கூறபபட்டுள்ளது

ஸௌராஷ்டர தேசத்தில் கலஹா என்ற பெயருளள ஒரு பெண் வசித்து வந்தாள். இந்தப பெண் தன கண வனுடன சரியானபடி வாழ்க்கையை நடத்தவில்லை. இந்நிலையில் அந்த கணவன் வேறொரு பெண்ணை மணம் புரிய ஏற்பாடு செயது கொண்டிருந் தான். அத்தருணத்தில் கலஹா தானாகவே விஷமுண்டு மரண மடைந்தாள.

அவளை யமகிங்கரர்கள் யமலோகத் தில் தர்ம ராஜனின் முன்னிலையில் நிறுத்தினார்கள். தர்மராஜன் சித்ர குப்தனைப பார்த்து கேடகிறான். "எனனென்ன பாப, புண்யங்கள் செயதுளளாள. அதற்கு என் னென்ன தண்டனைகள" என்று.

ஹே! தர்ம ராஜாவே! இவள எவ வித நற்கார்யங்களும் செயயவில்லை. இவள் செய்த தீய கார்யங்கள்.

1. இவள் தன கணவனின பேச் சைக் கேடபது கிடையாது. தான சாபபிட்டு விட்டு கணவனுக்குச் சாபபாடு போடுவதிலலை. இதறகு தண்டனையாக செமமறியாடாகப் பிறபபிக்க வேணடும்.

2 இவள் கணவனுடன சண்டை போட்டு துவேஷத்தை உண்டு பண்ணிக் கொண்டிருந்தாள. ஆகை யால் இவளைப் பன்றியின் வயிற்றில் பிறப்பிக்க வேண்டும்.

3. இவள் சமையல் செய்யும் பாத்திரத்திலேயே சாபபிடுவாள். ஆகையால் பூனையாகப் பிறபபிக்க வேண்டும்.

4 கணவன் பெயரில் பழியைப் போடுவதற்காகத் தற்கொலை செய்து கொண்டாள். ஆகையால் இவள் முதலில் பாலைவனத்தில் பிசாசாக வெகு ஆண்டுகள் இருந்த பின் மேற்கூறிய மூன்று ஜன்மாக்களையும் எடுக்க வேண்டும் என்று கூறினான்.

அம்மாதிரியே அந்தப் பெண் சுமார் 500 ஆண்டுகள் பிசாசாகத் திரிந்துக் கொண்டிருக்கும் போது தர்மதத்தன் என்ற ஒரு அந்தண ரைப் பார்த்தாள்.

அந்த அந்தணரை வணங்கி தன் கதையைக் கூறினாள். 'பிசாச உரு வத்தில் இருநத நான் பசி, தாகத் தினால் சுற்றி வரும்போது பிணமான வைச்யனின் உடலில் புகுந்தேன்.அவ வுடலுடன் தெற்கு திசையை நோக்கி வரும்போது கிருஷ்ணவேணி என்ற நதியின் கரையை அடைந்தேன். அங்கே என்னைப்பார்த்த சிவ-விஷ்ணு கணங்கள் அந்த வைச்ய சரீரத்தை எரித்து விடடார்கள. நான் அந்த சரீரத்தை விட்டு வெளியே வந்து பசி தாகத்தினால் பிடிக்கப்பட்டுச் சுற்றிவரும்போது தாங்கள்கண்களில் படடீர்கள் ஆகையால் ஹே அந்த ணச சிரேஷ்டரே! நான் எப்படி இந்த உருவத்திலிருந்து விடுபட்டு நற்கதி யடைவேன். அதற்குத் தாங்கள் உதவி செய்ய வேண்டும்" என்று கேட்டாள். விஷயங்களைக் கேட்ட றிந்த அவ் அந்தணன்,

"ஏ! கலஹாயே! உன்னுடைய பிசாசதோஷமானது மிகவும பாபத் தைக் கொண்டது. சாதாரண புண்ய கார்யங்களினால் அத்தோஷத்தைப் போக்க முடியாது. ஆகையால் நான் இது வரை செய்து வந்த கார்த்திகை மாத புண்ய கார்யங்களில் பாதியை உனக்காகக் கொடுக்கிறேன் நீ நற் கதியை யடைவாய்' என்றுகூறினான்.

## ஸ்ரீ அன்னமாச்சார்ய கீர்த்தனம்

### கமாஸ் ராகம் - ஆதிதளம்

இசை மெட்டு : ஸங்கீத விஸாரத ஜி.பால கிருஷ்ண பிரசாத

ப.- ;மகாம பா; தஸ்நிதநிப | மநீதா, நீ | ஸாநீஸா; ||
மெருகு வன் டி தி |அலமே லு | மங் க ||
;தநீஸ்ரீ நிஸாநிதாமா | பஸ்நிதபாதா | மாகாமா; ||
அ ரிமு ரி நவ் வீ னி |அல மே லு | மங் க || மெருகு

1ச.- ;கமாபபா பாதாமாகா | கமாதா, தநி | ஸா, நி தநீத ||
பலு சனி எ லு கு ன | பா டீ நீ | மீ தி பா ட ||
மா மகாரி மமகரி ஸாஸா; | ஸமாகா, மா | பாமாபா; ||
மெலு பு கூ ரி மி | அ ல மே லு | மங் க ||
;கமநிதனிப தாநிஸா, ஸ்ா | ;தாநிஸக்ரி | ம்ம்கரிஸ்ா, ஸ்ா ||
செலு லதோ நீ னுத் தி | செப்பிசெபபி | க ர கீ னி ||
;தநீஸரீ ;நிஸ்ா நிதபம | பஸ்நிதபாதா | மாகாமா; ||
அ லயு சு லொல யு சு | அல மே லு | மங் க || மெருகு

2ச:- காமபா, பா பாதாமாகா | கமா நிதா நீ | நிரிஸநிதப பநி ||
ஈ டு கா நீ ரா க கு | எதுரெது ரு | சூ சீ நி ||
தமா மாகரீ மமகரிஸாஸா | ஸமா கா, மா | பாமாபா, ||
மே டமீ தி னுன் டி | அல மே லு | மங் க ||
;கமநிதநிப தாநி ஸ்ா, ஸா | ;தநீஸ்கரி | மம்கரிஸ்ாஸ்ா ||
வா டு மோமு தோ நீ யை | வ் ல பு | சல்லி சல்லி ||
தநீஸ்ா, ரீரிநிரிஸ் நிதபம | பஸ்நிதபாதா | மாகாமா; ||
ஆ டீ நாட்யமு ஸாரெ | அல மே லு | மங் க ||

3ச:- ;காமபபா பதா, மா, கா | , கமாதநா | தா நீதா மா ||
பேருகொநி பிலி சீ நி | ப்ரிய மு லு | செபபி செப்பி ||
;மகாரி மமகரிஸா ஸாஸா | ஸமாகா, மா | பாமாபா; ||
மே ர மீ ர நின் னு | அ ல மே லு | மங் க ||
கமாநிதா நிப தாநிஸா, ஸா | தா, நிஸாகரி | ம்ம்கரிஸாஸ்ா ||
ஏ ரீ தி ஸ்ரீ வேங் க | டே ஸ நினு கூட நேடு ||
;தாநிஸாரி நிரிஸநிதாதம | பஸ்நிதபாதா | மாகாமா; ||
ஆ ரிதேர னனிடா னு | அல மே லு | ம ங க ||

பிறகு தன் கையிலிருந்த துளசி தீர்த்தத்தினுல் அபிஷேகஞ் செயது, துவாதசாக்ஷரமான 'நமோ பகவதே வாஸுதேவாய' என்ற மந் திரத்தை உபதேசித்தார் உடனே அபபெண்மணி பிசாசு உருவம் நீங்கி அழகான ஒளி பொருந்திய பெண் ணுக மாறிவிடடாள் அங்கே அப பொழுது விஷ்ணு தூதர்கள் தோன்றி அப்பெண்மணியை விஷ்ணு லோகத் திற்கு அழைத்துச் செல்லத் தயாரா னுர்கள் தர்ம தததன அவர்களை வணங்கி நின்றுன். விஷ்ணு தூதர் கள் தர்ம தத்தனைப பார்த்து 'ஏ! பிராம்மணேத்தம!! நீ செயத கார்த்திகை மாத புண்யத்தில் ஒரு பகுதியினுல் இந்தப பெண் மணி நற்கதியடைந்தாள பாக்கியுள்ள புண்ணியத்தினுல் நீ உன் இரு மனைவி களுடன விஷ்ணு லோகத்தை அடை வாய. எவவிதம் துருவனும் கஜேந் திரனும் விஷ்ணுவின் நாமத்தால் அழியாப புகழ பெற்ருர்களோ, அதே போல் நீயும் பெறுவாய்'' என்று கூறி மறைந்தார்கள்.

★

Edited and Published on behalf of the T. T. Devasthanams by K. Subba rao, M.A. and Printed at T T D Press by M. Vijayakumar Reddy Manager. T. T. D. Press, Tirupati-517501.

